*Muracoli*

*Muracu 3, oli 48*

*March 22, 1957*

Record no. 945

ஆசிரியர்

•வார இதழ்•



மு. கருணாநிதி

முரசு 3 || 22—3—57 வெள்ளி | ஒலி 48


## தாண்டி விட்டோம்!



# ★ 'விகடன்' வரவேற்பு! ★

சென்ற ஏழாம் தேதி காலை முதலே தி. மு. க. தோண்டர்களில் நூற்றுக் கணக்கானவர்கள் சைக்கிள்களில் ஏறிக் கொண்டு "அண்ணா வெற்றி, அண்ணா வெற்றி" என்று குதூகலமாகத் தெருவெங்கும் கோஷித்துக் கொண்டே சென்றார்கள். இளைஞர்களின் உற்சாகம் கரை புரண்டோடியது. ஊரெங்கும் இதுவே பேச்சாக இருந்தது.

ஆம்! காஞ்சியில் நடந்த தேர்தல் போட்டி தமிழ் நாட்டையே கவர்ந்த ஒரு நிகழ்ச்சி.

அங்கு காங்கிரஸ் சார்பாக தேர்தலுக்கு நின்ற டாக்டர் சீனிவாசன் அவர்கள் பழம் பெரும் தேசபக்தர். தியாகத்தால் உயர்ந்தவர். ஸ்ரீமான் அண்ணாத்துரையாலும் நல்லவர் என்று மதிக்கப்படுபவர். அவரை எதிர்த்து நின்று 11,143 ஓட்டுக்களை அதிகம் பெறுவது என்பது சாதாரண விஷயமல்ல.

அங்கு காங்கிரசின் தேர்தல் பிரச்சாரமும் குறைவில்லை. அதோடு பெரியார் ஸ்ரீ ஈ. வெ. ராமசாமி நாயக்கர் அவர்கள் வீட்டுக்கு வீடு சென்று "கண்ணீர்த் துளிகளுக்கு ஓட்டுப் போடாதீர்கள்" என்று கூறினார். அண்ணாத்துரையின் தோல்வியைக் கண்ணால் காண ஆசைப்பட்டார். இவ்வளவையும்மீறி இவ்வாறு மகத்தான வெற்றி கிடைத்துள்ளதைப் பார்க்கும்போது அண்ணாத்துரையின் மேல் மக்களுக்கு உள்ள அபிமானம் நன்கு புலனாகிறது...

அவர்கள் நடத்திய தேர்தல் கூட்டங்களிலெல்லாம் கண்ணியமான முறை கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. பேசிய தலைவர்கள் யாரும் வசை மொழிகளில் இறங்கவில்லை. தங்களை இடைவிடாமல் தாக்கும் பெரியாரைக் கூட அவர்கள் மரியாதை குறையாமல்தான் மறுத்துப் பேசி வந்தார்கள். இதைப் பார்த்து மக்கள் வியந்தனர்.

இவைகள் எல்லாவற்றையும் காட்டிலும் அண்ணாத்துரைக்கு நாடு இன்னொரு விதத்தில் கடமைப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டு இளைஞர்களிடையே அவர் ஊட்டியிருக்கும் அரசியல் அறிவையே குறிப்பிடுகிறோம். இன்று அந்த இளைஞர்களின் அரசியல் ஞானம் மாறான வழிகளில் சென்றாலும் நாளை அதுவே சீர்திருந்தி நாட்டுக்கு நலம் செய்வதாகவும் வர இடம் உண்டு.

சட்டசபையிலும் இனி ஒரு புது விழிப்பு ஏற்படும். கேள்விகளும், மந்திரிகளின் பதில்களும் காரசாரமாக இருக்கும். அண்ணாத்துரை என்ன சொல்லுகிறார் என்று பொதுமக்கள் அக்கறையுடன் கவனிப்பார்கள். தமிழர் நலத்திற்கான காரியங்கள் போட்டி போட்டுக்கொண்டு செய்யப்படும். அம்முறையில் நாம் அண்ணாத்துரையின் வெற்றியை வரவேற்கிறோம். ஆளும் கட்சியினரும் நன்றாக வரிந்து கட்டிக் கொண்டு இவரை வரவேற்பார்கள் என நம்புகிறோம்.

*கண்ணீர்த் துளிகள்! துரோகிகள்! நாடகமாடிகள்! நாட்டை நாசமாக்க வந்தவர்கள்!—என்றெல்லாம் 'நம்மவர்கள்' வசை பாடிக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில் அறிஞர் அண்ணாவைப் பற்றி 'வருக அண்ணாத்துரை'—என்ற தலைப்பில் 'ஆனந்த விகடன்' எழுதியிருக்கும் உப தலையங்கத்தை இங்கே தருகிறோம். காங்கிரசிற்குப் பிரச்சாரப் படம் எடுத்துக் கொடுத்தவருடைய பத்திரிகையின் பண்பாட்டினைப் பாராட்டுகிறோம்.*

# வெற்றியும்......விளைவும்!

தேர்தல் களத்தில்
வெற்றிபெற்ற காளையர்!

சட்டசபையில்...

1 அறிஞர் அண்ணா
2 மு. கருணாநிதி
3 க. அன்பழகன்
4 ஏ. வி. பி. ஆசைத்தம்பி
5 ஏ. கோவிந்தசாமி
6 ப. உ. சண்முகம்
7 சத்தியவாணிமுத்து
8 எம். பி. சுப்பிரமணியம்
9 எம். பி. சாரதி
10 எஸ். சந்தானம்
11 எம். செல்வராஜ்
12 இருசப்பன்
13 அண்ணாமலை (களம்பூர்)
14 நடராசன்
15 எம். ஆனந்தன்

மக்கள் சபையில்...

1 ஈ. வெ. கி. சம்பத்
2 தர்மலிங்கம்

(ஆதரவாளர்கள்)

3 டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி
4 என். சிவராஜ்

## ஈ. வே. ரா. பெரியாருக்குத் திடீர் ரத்தக் கொதிப்பு!

★

ஏற்காடு போய் ஓய்வு பெறுகிறார்!

★

சென்னை, மார்ச் 20—

திராவிட கழகத் தலைவர் ஈ. வெ. ராமசாமி பெரியாருக்கு திடீர் என்று ரத்தக் கொதிப்பு ஏற்பட்டுள்ளது. ஆகவே அவர் சேலம் அருகே உள்ள ஏற்காட்டுக்கு மணி அம்மையுடன் போய் ஓய்வு பெற்று வருகிறார்.

—'தினத்தந்தி' செய்தி (20—3—57)



# தலையங்கம்

உதித்துவிட்டான் செங்கதிரோன் தென்திசையில்
கொதித்தெழுவோம், கொத்தடிமை தீர்வதற்கே!

வெள்ளி 22—3—57 சென்னை

# வெற்றி! வெற்றி!!

மடமை இருள் மண்டிக்கிடந்த காங்கிரஸ் மண்டபத்திலிருந்து வெளவால்களை விரட்டியடித்து; வாடிய பயிர்போல் நல்லதொரு எதிர்க் கட்சிக்காக ஏங்கியிருந்த தமிழகத்தில் உதய சூரியன் சின்னம் பெற்றிருந்த திராவிட முன்னேற்றக் கழகம் தமது ஜனநாயகக் கடமையை செவ்வனே புரிந்து செயலாற்றுவதிலே கணிசமான—குறிப்பிடத்தக்க—பெருமைக் குரிய—பெறற்கரிய — வெற்றியினைப் பெற்றிருக்கிறது.

ஆமாம்; மடமை இருள் அகற்ற; விடுதலை ஒளி பரப்ப உதித்து விட்டான் செங்கதிரோன், தென்திசையில்—தென்னகத்தில்!

"வெறும் பேச்சுக்காரர்கள்; வாய்வீச்சாளர்கள்! இவர்களால் ஒரு 'சீட்டு' பெற முடியுமா?"

—கொக்கரித்தார் விருதுநகரத்து வீரர்!

"பொடிப்பயல்கள்! அடுக்குச்சொல் பேசும் இவர்களில் ஒருவன் கூட சட்டசபைப் பக்கம் தலை நீட்டாமல் செய்துவிடுகிறேன்."

—தனயர்கள் பக்கம் இருக்க வேண்டியவர்; அப்படியில்லாவிட்டாலும் கொள்கைவழி மாறாமல் நடுவுநிலை வகிக்க வேண்டியவர்; அவரே சாக்கடை நடையில் சந்துபொந்துகளில் இருந்தெல்லாம் 'சவால்' விடுத்தார்!

அந்தோ பரிதாபம்! ஒருவர்கூட நுழைய முடியாது என்று மார் தட்டிக் கூறினார்கள்!

இன்றோ அவர்களது மண்டைக் கனம் தவிடுபொடியாகும் வகையிலே—முகத்திலே கரிபூசும் விதத்திலே பதினைந்துபேர் சட்டசபையிலே படையெடுத்திருக்கிறோம். இது ஒன்றே நமக்கு பெரும் வெற்றியாகும்!

ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்னும் விதத்திலே தள்ளித் திரியும் மாட்டிற்கு மூக்கணாங்கயிறு மாட்டுவீர் என்று ஆணையிட்டு, பதினைந்து பத்தரைமாற்றுத் தங்கங்களை தமிழக மாந்தர் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கிறார்கள்!

ஒரு கட்சி சர்வாதிகாரம் போதும்; சூதர் கூடாரமாகிவிட்ட ஆட்சி பீடத்தை வேலும் வாளும் கொண்டு காவல் புரிவீர்—என்று நல்ல திட்டத்திற்கும், நல்ல தமிழ்ப் பேச்சிற்கும் உரிமையாளர்களை கோட்டைக் கூடத்திற்கு போ என்று கூறி உத்தரவு நீட்டிவிட்டார்கள் பொதுமக்கள்!

இனிமேல் திராவிட முன்னேற்றக் கழகம்தான் ஆளும் கட்சியினை அதட்டிக் கேட்கும் எதிர்க் கட்சி!—என்கிற நிலை பிறந்துவிட்டது தமிழகத்திலே!

காங்கிரசை எதிர்த்த காங்கிரஸ் சீர்திருத்தக்கமிட்டி பெற்றிருக்கும் வாக்குகள் மொத்தத்தில் 8.3 சதவிகிதம்தான்!

வடநாட்டிலே தலைமையை ஒப்புவித்துவிட்டு ஆடும் பாவைகளாய் விளங்கும் கம்யூனிஸ்ட்டுகள் பெற்ற வாக்குகளோ 7.9 சதவிகிதந்தான்!

பிரஜா சோசலிஸ்ட்டுகள் பெற்ற வாக்குகளும் 2.5 சதவிகிதம் தான்!

சோசலிஸ்ட்டுகளால்கூட 1.7 சதவிகிதம் வாக்குகளைத்தான் பெறமுடிந்திருக்கிறது!

ஆனால் அறிஞர் அண்ணாவின் சீரிய தலைமையால்; நாவலர் நெடுஞ்செழியனின் நேரிய பணியால் வன்மைபெற்று; உண்மை விளக்கம் நாடிச் செல்லும் திராவிட முன்னேற்றக் கழகம் பெற்ற வாக்குகளோ 14.2 சதவிகிதம்!

ஆமாம்; காங்கிரசுக்கு அடுத்த காங்கிரசை எதிர்க்கும் மாபெரும் அரசியல் அமைப்பு தி. மு. க. என்னும் உண்மை உதய சூரியன்போல் உலவ ஆரம்பித்துவிட்டது!

மாற்றுக்கட்சி நண்பர்களும்; மக்கள் மன்றத்திலே போறுப் புணர்ந்த பெரியவர்களும்கூட இதை மறுப்பதற்கில்லை.

சட்டசபையின் முன்னாள் செயலாளர் ஆர். வி. கிருஷ்ணய்யர் சென்னைக் கூட்டமொன்றிலே பேசியிருக்கிறார்:

"காங்கிரசிற்கு அடுத்தபடியாக திராவிட முன்னேற்றக் கழகம் சென்னை ராஜ்யத்தில் பலமான அரசியல் கட்சியாக முன்வந்துள்ளதே தற்போது ராஜ்யத்தில் முடிந்துள்ள பொதுத் தேர்தலிலிருந்து ஏற்பட்டுள்ள முக்கியமான அம்சமாகும்........ஸ்தாபன ரீதியில் சென்னை ராஜ்யத்தில் காங்கிரசைப்போல் தி. மு. க. வும் பலம் வாய்ந்ததென்று திட்ட வட்டமாக ருஜுவாகிவிட்டது."

—கிருஷ்ணய்யர் போன்றவர்கள் பொது இடத்தில் இவ்வாறு விமர்சனம் செய்கிற அளவுக்கு நமது கழகம் தேர்தல் களத்திலே வெற்றிவாகை பெற்றிருக்கிறது!

நாம் வெறும் காங்கிரசை மட்டும் எதிர்க்கவில்லை. அப்படியிருந்தால் துருப்பிடித்துப்போயிருக்கும் காங்கிரசை நாம் எப்போதோ குப்பைமேட்டிலே தூக்கியெறிந்திருக்க முடியும்.

ஆனால் ஆலை அரசர்களிடமிருந்தும்; வட்டிவேந்தர்களிடமிருந்தும் வந்த பணநாதன் அவர்கள் பக்கமிருந்தான்! கஜானாவிலிருந்து ரூபாய் நோட்டுகளாகக்கொண்டு வந்து ஒரு சிறிதும் மானம், வெட்கம் இல்லாமல் ஆடுமாடுகளை வாங்குவதைப்போல் ஓட்டுகளை விலைக்கு வாங்கி; இன்னும் கீழ்த்தரமான முறைகளையெல்லாம் கைக்கொண்டு வெற்றி பெற முனைந்தார்கள்!

நேர்மையின் வாடையே சிறிதுமில்லாத அவர்களிடமிருந்து—ஜனநாயக நங்கையைத் துடிக்கத் துடிக்கக் கொலை செய்யும் அவர்களது கோரப்பிடியிலிருந்து—பதினைந்து இடங்களை நாம் மீட்டிருக்கிறோமென்றால் அதற்கு வேங்கையின் வாயில் விழுந்த வெள்ளாட்டை மீட்டிருக்கிறோமென்று அர்த்தம்!

காசு பணத்தால் குடியாட்சி முறைக்குக் குழிதோண்டிய அந்தக் கொடியவர்களை பதினைந்து இடங்களில் தலை குப்புறக் கவிழ்த்திருக்கிறோமென்றால் அதற்கு உண்மை ஜனநாயகத்திற்கு வெற்றி தேடித் தந்திருக்கிறோம் என்று பொருள்!

ஆனால் வெறும் கூலிப் போராட்டத்தைத் தவிர வேறொன்றுமறியாத கம்யூனிட்டுகளும்; கூலிக்கு மாரடித்தத் தந்தையர் கழகத்தினரும் இன்னமும் கண்டனக் கணைகளை ஏவுகின்றனர்—எத்தனை இடங்களில் போட்டியிட்டார்கள்? எத்தனை இடங்களில் வெற்றி பெற்றிருக்கிறார்கள்?—என்று கணக்கு கேட்கிறார்கள்; கணக்கு காட்டுவதையே தங்கள் வரலாற்றில் பெற்றிருக்காத வீராதிவீரர்கள்!

நூற்றுக்கு மேற்பட்ட இடங்களிலே நமது அபேட்சகர்களை நிறுத்தினோமென்றால் அவர்கள் அனைவருமே வென்றுவிடுவார்கள் என்ற நினைப்பிலா நாம் அவர்களை நிறுத்திவைத்தோம்? உடனே அவர்களைக்கொண்டு மந்திரிசபை நிறுவிவிடுவோம் என்ற கருத்திலா நாம் தேர்தலில் போட்டியிட்டோம்? அல்ல; அல்ல.

துவக்கத்திலேயே அறிஞர் அண்ணா அவர்கள் மிகத் தெளிவுற விளக்கியிருக்கிறார்கள்:

"சில இடங்களில் நாம் போட்டியிட இருப்பது அந்தத் தொகுதியிலேயிருக்கிற காங்கிரஸ் சக்தியை அந்தத் தொகுதியிலேயே தேக்கி வைப்பதற்காக ஆகும்.

சில தொகுதிகளிலே நாம் போட்டியிடுவது அந்தத் தொகுதிகளில் இருக்கும் காங்கிரஸ்காரர் வேறுதொகுதிக்கு வந்து அங்கு இருப்பவர்களைத் தட்டிவிடாமலும்; உசுப்பிவிடாமலும் இருக்கச் செய்வதற்கு!

இன்னும் சில தொகுதிகளில் நாம் போட்டியிடுவது அந்தத் தொகுதிகளில் உள்ள திராவிட முன்னேற்றக் கழக ஆதரவாளர் தங்கள் வாக்குறுதிகளை வேறு பெட்டிகளில் போடக்கூடாது என்று ஒதுங்கி நிற்கும்படி நேரிடாமல், உனக்கு என்று ஒரு பெட்டி உண்டு; உன் வாக்குகளை அதிலே போடு—என்று திருப்புவதற்காக ஆகும்.

சில தொகுதிகளில் நாம் நிச்சயமாக வெற்றி பெறுவோம் என்ற கருத்தோடும் நிற்கிறோம்"

—அண்ணா அவர்கள் கூறியவற்றைக் கருத்தில் கொண்டால் நாம் தோல்வியுற்றோம் என்று கருதுவோர் குருட்டறிவு நீங்கப் பெறுவர்.

நிச்சயம் நாம் பெற்றிருக்கும் வெற்றியை யாராலும் குறைசொல்ல முடியாது.

இந்தப் பதினைந்து இடங்களிலும் நாம் பெற்ற வெற்றி, அடுத்த தேர்தலில் இரட்டிப்பாக—மும்மடங்காக—பல மடங்காகப் பெருகும்; பெருக வேண்டும்; பெருகத்தான்போகிறது! தந்தையே மீண்டும் குறுக்கிட்டாலும் அவரே வெட்கித் தலைகுனிந்து; அவருடன் இருப்போர் தவறை உணர்ந்து; தங்களது பழங்காலப் பழியதனைத் துடைப்பதற்கென நம்மோடு கலந்துவிடும் அந்த நல்ல காலம் வரத்தான் போகிறது! ஃ

# 'திராவிடத்தைக் காப்போம்!'



தென்னகத்தின் உதய சூரியன்; தமிழக மாந்தரின் இதயம் கவர் கள்வன்; அறிஞர் அண்ணாவின் வெற்றியால் சட்டசபையே பெருமை பெறுகிறது!

திராவிடமா? அந்த வார்த்தை இலக்கியத்தில் இல்லையே!

—அங்கலாய்த்தார்கள் பலர்! தீக்குழியில் விழுந்ததைப்போல அந்தச் சொல்லைக் கேட்டதுமே தாவிக் குதித்தார்கள்; இரு செவிகளையும் மூடிக் கொண்டார்கள்!

வரலாற்றில் இடம் பெற்ற அந்த வாசகத்தை மறைத்து விட, அதை எடுத்துணர்த்தும் நம்மீது இழிவைச் சேர்த்து விட என்னென்னவோ பாடு பட்டார்கள்!

சென்னைக் கடற்கரை ஓரத்திலே நின்று கொண்டிருக்கும் உ. வே. சுவாமிநாதய்யர் சிலையின் அடியிலே எழுதப் பட்டிருக்கும் வாசகத்தைப் படியுங்கள். திராவிட வித்யா பூஷண உ. வே. சாமிநாதய்யர் என்று போடப்பட்டிருக்கிறது. அதைக் கூடவா மறந்து விட்டீர்கள்?

—எடுத்துரைத்தோம், நாம் பல முறை!

மகாபலிபுரத்திலே இருக்கும் சிற்பங்களை நோக்குங்கள்! திராவிட பாணியிலே அவை செதுக்கப்பட்டிருப்பதாக அரசாங்கமே 'போர்டு' எழுதி மாட்டியிருப்பதைக் கூடவா நீங்கள் கவனிக்கவில்லை?

—ஆயிரம் தடவை எடுத்துக் காட்டி இருக்கிறோம் இப்படி!

பள்ளி மாணவனின் சரித்திரப் புத்தகத்தை வாங்கிப் புரட்டுங்கள்; தென்னிந்தியாவின் பூர்வ குடிகள் திராவிடர்கள்—என்று எழுதப்பட்டிருக்கிறது;

—இதுகூடவா புரியவில்லை என்று கேட்டோம்!

ரவீந்திரநாத் தாகூர் எழுதிய தேசிய கீதத்தை மறுமுறை கேட்கும்போது உன்னிப்பாக கவனித்துப் பாருங்கள்; 'திராவிட உத்கல வங்கா' என்று வருகிறது. அந்தத் திராவிடத்தைத் தானே நாங்கள் குறிப்பிடுகிறோம்.

—சொன்னோம்; செவிகளில் ஏறவில்லை!

ஆனால் இன்றோ தெளிவு பெறாத நெஞ்சங்கள் எல்லாம் தெளிவுபெற ஆரம்பித்திருக்கின்றன.

அறிவாளிகள் அனைவரும் உண்மையை உணரத் துவங்கி விட்டனர்.

அதற்கு ஓர் அரிய எடுத்துக் காட்டுதான் 'கல்கி' ஏட்டின் தலையங்கங்கள்!

'கல்கி' 10—3—57-ம் நாள் இதழ் தலையங்கத்தின் ஒரு பகுதியைக் கீழே தருகிறோம்:

"...பழம் இலக்கியங்களில் திராவிடம் என்றால் தென்னாடு என்றுதான் பொருள். தென்னாடு முன்னேற வேண்டும்; அந்த நாடும் அதில் வசிக்கிற மக்களும் முன்னேற வேண்டும். அந்த மக்கள் ஒன்று பட வேண்டும். எந்தச் சமூகத்தாரையும் விலக்கலாகாது; வெறுக்கலாகாது...."

எந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் பலர் துள்ளிக் குதித்தார்களோ அதே வார்த்தையைத் தன் தலையங்கத்திலேயே உபயோகித்து, 'திராவிடத்தைக் காப்போம்' என்ற தலைப்பில் தலையங்கம் தீட்டியிருக்கிறது, 24—3—57 இதழில்.

"...திராவிடம் என்பது தென்னாட்டின் பெயர். அதன் முன்னேற்றத்தை முக்கியமாக கவனிக்கும் கூட்டம் ஒன்று இருப்பது அவசியம்......ஜனகண என்று நாம் பாடும் நாட்டு வணக்கப் பாட்டில் சொல்லப்பட்ட 'திராவிட'த்தைக் கவனித்துக் காத்து வருவோமாக."

—உண்மையை ஒப்புக் கொள்ளும் மாற்றுக் கட்சியினருக்குள்ளே 'கல்கி' முதன்மை வகிக்க முந்திக் கொண்டிருக்கிறது. அதன் துணிவினைப் பாராட்டுகிறோம்! திராவிடத்தைக் காப்பாற்ற—திராவிடம் என்ற வார்த்தையை ஏற்றுக் கொள்ள—அது இதர மாற்றுக் கட்சியினரையும் தூண்டும் என்றும் நம்புகிறோம்!

## நிபந்தனையற்ற சரணாகதி!

"நிபந்தனை கேட்டு ஆதரிக்கின்ற பழக்கமோ, அவசியமோ பெரியார் அவர்களுக்கு என்றும் இருந்ததில்லை."

—"விடுதலை" (18—3—57)

★ திராவிடத்தின் சம்பத்து; தாயகத்தின் இடர் ஒழிக்க மக்கள் சபை செல்லும் எங்கள் பிரதிநிதி! ★







# அரசியின் அடிமை

பி. சி. கணேசன் பிஎஸ்ஸி. பி.டி.

(சென்ற வாரத் தொடர்ச்சி)

காலைக் கதிரவனின் கிரணங்கள் வழக்கம்போல் யாகூத்தை மகிழ்ச்சியில் ஆழ்த்தவில்லை; அவனுடைய உள்ளத்தில் பலத்த போராட்டமொன்று நிகழ்ந்து கொண்டிருந்தது.

பமீயாவை அவன் மறக்க வேண்டும். அரசி அப்படி ஒரு கட்டளையிட்டிருந்தால் கூட அவன் அவ்வளவு அதிகமாகக் கவலைப்பட்டிருக்க மாட்டான். பமீயாவே அல்லவா அதைக் கூறிவிட்டாள்?

தேனை மறக்கும்படி தும்பிக்கும், வானை மறக்கும்படி பயிருக்கும் வேண்டுகோள் விடுப்பதில் என்ன விவேகம் இருக்க முடியும்?

'காதலுக்கும் கடமைக்கும் இடையே போராட்டம் நடைபெறலாம் சில சமயங்களில் அது தவிர்க்க முடியாததும் கூட. ஆனால், என் வாழ்க்கையில், அரசி என்மீது கொண்டிருக்கும் காமத்திற்கும், பமீயா கொண்டிருக்கும் காதலுக்குமிடையே அல்லவா ஒரு போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. ஒழுக்கத்தைவிட்ட அரசி ஒரு பக்கம்—நன்றி மறவா நாட்டுணர்ச்சியுடைய பமீயா மற்றொரு பக்கம்...அரசி தன் உயிர்த் தோழி பமீயாவிற்காகக் காமத்தைத் தியாகம் செய்ய மறுக்கிறாள்... ஆனால் பமீயாவோ, அரசி வாழ—அரசிக்கு எதிராக உருவாகும் சதியை முறியடிக்க—அவள் காதலையே தியாகம் செய்ய முடிவு செய்துவிட்டாள்......கோபுரத்தில் புதர் மண்டுவதும், குப்பைமேட்டில் கொடி முல்லை படர்வதும் தான் இயற்கையின் நியதியா?'

—யாகூத்தின் சிந்தனைச் சங்கிலி புதுப்புது வளையங்களைக் கோர்த்துக் கொண்டிருந்தது.

'யாகூத்!' என்ற குரல் அந்தத் தொடர்ச்சிக்கு முற்றுப் புள்ளி வைத்தது. எதிரே பமீயா நிற்கவில்லை; அரசி, ஆணுடை பூண்டு அம்புறாத் தூணி தோளிலே தொங்க, நின்று கொண்டிருந்தாள்.

யாகூத்தின் உள்ளம் பற்றி எரிந்தது. ஆனாலும் எழுந்து நின்று அரசிக்கு மரியாதை செய்தான்.

தூரத்தில் அம்பாரி கட்டிய யானை வேட்டைக்குப் புறப்படத் தயாராக நின்றுகொண்டிருந்தது. யாகூத்திற்கு விஷயம் விளங்கிவிட்டது. அரசி ருசியா வேட்டைக்குப் போகத் தன்னையும் அழைக்க வந்திருக்கிறாள் என்பதை யூகிக்க அவனுக்கு வெகு நேரமாகவில்லை.

"புறப்படு யாகூத்; காட்டு மிருகங்கள் தொல்லை நாட்டிலும் புக ஆரம்பித்திருக்கிறது. அடிக்கடி புலி, சிறுத்தை போன்ற மிருகங்கள் குடியானவர்களின் கால் நடைகளுக்குப் பலத்த சேதம் விளைவித்து வருவதாக அறிகிறேன். ஆகவேதான் வேட்டைக்குப் புறப்பட்டுவிட்டேன்," என்று ருசியா வந்த காரியத்தைக் கூறினாள்.

"பீகம், காட்டு விலங்குகள் மட்டும் கவனத்திற்கு வந்து பிரயோஜனமில்லை; நாட்டில் உலவிடும் நச்சரவங்களையும் ஒழுங்காகக் கண்காணிக்க வேண்டும்..."—யாகூத் சற்று தைரியத்துடனேயே பேசினான்.

அரசி கலகலவென்று நகைத்தாள். அவளது பல் வரிசை சூரிய ஒளிபட்டு, அவளுடைய கழுத்தில் பிரகாசித்த முத்து மாலையைக் கேலி செய்தன.

"யாகூத், நீ யிருக்கும்போது நாட்டில் நடமாடும் நச்சரவங்களைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்...ஹூம்... சரி, சரி, புறப்படு." என்று கூறி அவனை கூர்ந்து பார்த்தாள். கரிய விழிகள் காந்தம் போல் அவனை வசிகரித்தது. கடை விழிகளில் ஆசை ஜுவாலையிட்டது. அவள் உதடுகளில் குறும்புப் புன்னகை அரும்பியது.

அரசி யானையை நோக்கி நடந்தாள். யாகூத் பதில் பேசாமல் அவளைப் பின் தொடர்ந்தான்.

* * *

"இருட்டிவிட்டது பீகம். இனியும் இந்த அடர்ந்த காட்டில் கொடு விலங்குகளுக்கு மத்தியில் தங்கியிருப்பது ஆபத்தானது!'—பகலெல்லாம் காட்டில் அரசியோடு அலைந்து திரிந்து களைத்துப்போன யாகூத் அரசியை எச்சரித்தான்.

"பெண் போலப் பேசுகிறாயே, யாகூத். வீரனின் திறமையே நெருக்கடிகளைச் சமாளிப்பதில்தானே இருக்கிறது." என்று அரசி வீரத்திற்கு இலக்கணம் வகுத்துக் கொண்டிருந்தாள்.

"போர் வீரர்களெல்லாம் காட்டின் எல்லையில் நம் வருகைக்காகக் காத்திருப்பார்கள்......அங்கு போகாமல் நாம் இருவர் மட்டும் இங்கு தனிமையாக இருப்பது அவதூறு பேச இடமளிக்கும்!"—யாகூத் மனதிலுள்ளதை வெளிப்படையாகப் பேசினான்.

"தவறு, அவதூறு, தனிமை—வேடிக்கையான வார்த்தைகள் ஓம்ரா, வேடிக்கையான வார்த்தைகள்......நம்முடைய பாதுஷாக்கள் பணிப் பெண்களோடு தனிமையில் இருந்ததைப் பற்றியெல்லாம் யாரும் அவதூறு பேசுவதில்லையே..."

'அவர்களெல்லாம் ஆண்கள்; நீ பெண்' என்று சொல்ல வேண்டும்போல் யாகூத்திற்குத் தோன்றியது. ஆனால் அவன் அதைச் சொல்லவில்லை.

அடர்ந்த மரநிழலையும் ஊடுருவிக் கொண்டு நிலவுக் கிரணங்கள் எங்கும் தண்ணொளி பரப்பிக் கொண்டிருந்தது.

ருசியா வேட்டை உடைகளெல்லாம் களைந்துவிட்டு, மெல்லிய மஸ்லின் மெருகேறிய மேனியை மறைத்து, திரட்சியடைந்து நிற்கும் பெண்மையழகைச் சற்று சிறப்பாகவே வெளிப்படுத்திக் காட்ட, நிலவின் பொலிவில், அழகுச் சிலையாய் அமர்ந்திருந்தாள். யாகூத்தோ முன்னெச்சரிக்கையாகவே விழிகளுக்கு அந்த அலங்கார மேனியை விருந்தாக்காமலேயே, வேறு புறமாகப் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

"என்ன யாகூத், எனக்குக் கூட ஒரே களைப்பாக இருக்கிறது. இதோ பார், அம்பிலுள்ள இரத்தத்தைத் துடைத்தபோது, விரலில் ஏற்பட்டுவிட்ட காயத்தை......" என்று கூறிக் கொண்டே எழுந்து போய், தன்னுடைய கையை யாகூத்தின் கரங்களில் வைத்தாள்.

வேட்டை விபரீதமான கட்டத்தை அடைந்துவிட்டது என்பதை யாகூத் உணர்ந்தான்!

"நான் போய் காயத்தைக் கழுவத் தண்ணீர் கொண்டு வரட்டுமா?" என்றான் யாகூத் சாமர்த்தியமாக.

"வேண்டாம் யாகூத், நீயும் போய்விட்டால் நான் தனிமையில் என்ன செய்வேன்...... எனக்கு மயக்கமாக வருகிறது," என்று கூறியபடியே அவன் கரங்களில் சாய்ந்தாள்.

இரண்டு முரட்டுக் கரங்கள் அந்த மிருதுவான மேனியை ஸ்பரிசித்தன. இளமையின் ஆசாபாசங்கள் கட்டுமீறி, நிலை மறந்து கோரத் தாண்டவம் புரியும் நிலை பெற்றன. கண்ணியத்தின் காவலனாக, கடமை மறவா வீரனாக, காதலிக்குத் துரோகமிழைக்காத பெருந்தகையான யாகூத். அழகி ருசியாவின் அழகு வெள்ளத்தால் அடித்துச் செல்லப்படும் நிலை பெற்றுவிட்ட நேரம்...எந்த வினாடிக்காக அழகி ருசியா பீகம் ஏங்கி ஏங்கித் தவித்தாளோ அந்த வினாடி அவளை நாடி வந்துவிட்ட நேரம்...

ருசியா பீகத்திற்கு வெற்றி!

யாகூத்தின் விரதத்திற்குத் தோல்வி!

பமீயாவின் காதலுக்கு...? அரசியின் செவ்வதரங்கள் மலர்ந்தன. கண்கள் காம வெள்ளத்தைப் பாய்ச்சின. நிலவு போதையூட்டிக் கொண்டிருந்தது. அரசியைக் கரங்களில் இறுக அணைத்தபடியே அவள் உதடுகளை நோக்கி முகத்தைவளைத்தான் யாகூத்! அரசியின் கழுத்தில் பிரகாசித்த முத்துச் சரத்தின் ஒளி அவன் கண்களைக் குத்தியது. யாகூத் ஒளி பெற்றான் ...அவள் அன்று அந்த முத்து மாலையைப் பரிசளித்தது...... அதைப் பெற்றுக் கொண்ட நேரத்தில் அரசிக்கு அருகில் வீற்றிருந்த அந்தப் பெண்ணுருவம்...பமீயா...ஆம், பமீயாவேதான்! முத்துச் சரத்தின் மத்தியில் முறுவலித்து முகம் காட்டி யாகூத்தின் இழி செயலை ஏளனம் செய்து கொண்டிருந்தாள்.

ஒரு பெண் யாகூத்தை மிருகமாக்கினாள்; மற்றொரு பெண் மிருகமாக இருந்தவனை மனிதனாக்கினாள்.

பமீயாவின் நினைவு, யாகூத்தை நிலையுணரச் செய்தது. அரசியை அப்படியே கை நழுவவிட்டான்.

அரசி கட்டிய ஆசைக் கோபுரம் சுக்கு நூறாக நொறுங்கி விழுந்தது.

"மன்னித்துவிடுங்கள் பீகம், உங்கள் போக்கு என்னை மிருகமாக்க இருந்தது; அல்லா காப்பாற்றி விட்டார்..."

"நீ உணர்ச்சியுள்ள மனிதன் தானே யாகூத்? ஒரு பெண்ணின் உள்ளத்தை உணராமல், அதனால் விளையவிருக்கும் ஆபத்தை அறியாமல், உன் எதிர்காலத்தைப் பாழாக்கிக் கொள்ளும் முட்டாளாக நான் உன்னைக் கருதவில்லை......என்னைப் பார் யாகூத்..."

"பீகம், என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டாள் உங்கள் பணிப் பெண் பமீயா. நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் மனமாரக் காதலிக்கிறோம். பமீயாவோ உங்களை தெய்வமாக எண்ணி, என் காதலையும், உங்கள் நல் வாழ்வுக்காகத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறாள்...எனக்காக இல்லாவிட்டாலும் அந்

❊ 11-ம் பக்கம் பார்க்க

# துல்லியமான – தூய்மையான – தூய நறுந் தொண்டு புரிவோம்!

தலைவரவர்களே! தோழர்களே! அருமைத் தாய்மார்களே! உங்கள் அனைவருக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக என் நன்றி கலந்த வணக்கத்தை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைய தினம் நீங்கள் எல்லோரும் பூரிப்போடும், வெற்றிக் களிப்போடும் என்னை மகிழ்ச்சிப் பெருங் கடலில் மூழ்க வைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறீர்கள். ஆனால் நான் இந்த வெற்றியை சுவைத்தும் சுவைக்காமலும் உங்களிடையே பேசிக் கொண்டிருக்கிறேன்.

திராவிட முன்னேற்றக் கழகம் என்னை இத்தொகுதிக்கு அனுப்பி, 'கழகத்தின் சார்பில் காங்கிரசை எதிர்த்துப் போட்டியிடு!' என்று கட்டளையிட்டது. நான் முன்பு உங்களிடையே பேசும்போது குறிப்பிட்டேன், "நான் இதுவரை வெறும் கருணாநிதியாக உங்களிடம் பேசினேன்; இப்போது அபேட்சகன் கருணாநிதியாக வந்திருக்கிறேன்!" என்று. பேசி பத்துப் பதினைந்து தினங்கள்கூட ஆகவில்லை; வெறும் கருணாநிதியாக இருந்து அபேட்சகன் கருணாநிதியாக மாறிய நான், இப்போது உங்களால் எம். எல். ஏ. கருணாநிதியாக ஆக்கப்பட்டிருக்கிறேன்.

அந்த விதத்தில் இன்றைய தினம் நான் பெற்றிருக்கிற வெற்றி, குளித்தலைத் தொகுதி மக்களாகிய நீங்கள் அனைவரும் பெற்ற வெற்றியாகும். ஆனால் இந்த வெற்றிக்கான எனது முதல் வணக்கத்தை ஏற்றுக் கொள்ளக் கூடியவர் என் தந்தை பெரியார் ராமசாமி அவர்கள்தான்! அதனால்தான் எனது வெற்றிச் செய்தியையும் அறிஞர் அண்ணா அவர்களுக்கு அனுப்புவதற்கு முன்பே பெரியாருக்கு அனுப்பினேன், தந்தியின் மூலமாக. ஏனென்றால் அவர்தான் படாதபாடுபட்டு—பல நாள் இத்தொகுதியில் சூறாவளியென சுற்றிச் சுழன்று—பத்தாம் தேதி மாத்திரம் இருபத்தைந்து கூட்டங்களுக்குமேல் எனக்காகப் பேசியிருக்கிறார்; என் வெற்றிக்காக உழைத்திருக்கிறார். அதனால்தான் அவருக்கே என் முதல் வணக்கங்கள் என்றேன். கேலிக்காக அல்ல; கிண்டலுக்காக அல்ல; நான் முன்பே சொல்லியிருக்கிறேன், 'நான் தேர்தலில் வெற்றி பெற்றால், முதலில் ஈரோடு நோக்கியோ, அல்லது திருச்சி நோக்கியோ, பெரியார் எந்தத் திசையில் இருந்தாலும் அத்திசையில் தெண்டனிட்டு வணங்குவேன்!' என்று! ஆகவேதான் தந்தி அனுப்பினேன். எனதருமை நண்பர் அம்பில் தர்மலிங்கம்தான் தந்தியைக் கையெழுத்திட்டு அனுப்பி வைத்தார். பெரியார் அவர்கள்கூட நினைத்திருக்கலாம்; தோற்றுப்போன காங்கிரஸ் அபேட்சகர் தர்மலிங்கம்தான் தந்தி கொடுத்திருக்கிறாரோ என்று!

இப்படியாக, அவருக்கும், என்னை எதிர்த்து வேலை செய்தவர்களுக்கும் முதன் முதலில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதுதான் வெற்றி பெற்ற ஒரு அபேட்சகனின் கடமையும், நாணயமும், நேர்மையும், ஜனநாயக முறையுமாகும் என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். அதைத்தான் என் அண்ணனிடம் பாடமாகவும் கற்றிருக்கிறேன்.

பூரிப்போடும், புன்னகைவடிகின்ற முகத்தோடும் உங்களை நான் பார்த்த போதிலும், முதலிலேயே குறிப்பிட்டதுபோல இந்த வெற்றியை என்னால் முழுதும் அனுபவிக்க முடியவில்லை. எனக்கு முன் பேசிய தோழர் மதுரை முத்து அவர்கள் குறிப்பிட்டார்கள், அறிஞர் அண்ணாவும், நாவலர் நெடுஞ்செழியனும், கருணாநிதியும் மட்டுமே சட்டசபைக்குச் சென்றாலே போதும் என்றுதான் கருதியதாக. ஆனால் அந்த மூவரில் நமதருமை நாவலர் — பொதுச் செயலாளர் நெடுஞ்செழியன் அவர்கள் சட்டசபையில் அமர்ந்திட — தனக்குப் பின்னால் இருக்கும் லட்சோபலட்சம் திராவிட முன்னேற்றக் கழக அணிவகுப்பு வீரர்களுக்கு ஆணையிட முடியாத நிலையில்— சதியின் காரணமாக—சுமார் 200 ஓட்டுகள் வித்தியாசத்தில் வெற்றிபெற இயலாது போயிருக்கிறார்கள். அந்த 200 ஓட்டுகளையும், நாவலரை எதிர்த்து நின்ற காங்கிரஸ் தோழர் சூது செய்து பெற்றார் என்பதையும், 'வழக்கு மன்றத்திலே அதற்குப் பரிகாரம் தேடத்தான் வேண்டும்' என்று அதுகுறித்து அறிஞர் அண்ணா அவர்கள் சேலத்தில் ஒரு மாபெரும் பொதுக் கூட்டத்தில் அறிவித்திருக்கிறார்கள் என்பதையும் நீங்கள் உணருவீர்கள்.

இன்றைய தினம் வரை என்னோடு சட்டசபைக்கு 12 பேர் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். இன்னும் ஓரிரண்டு பேர் வரலாம். வரவிடில் 12 பேர் தான்! இதை நீங்கள் சிரமப் பட்டுக்கொண்டுகூடச் சொல்ல வேண்டாம்; 'ஒரு டஜன்' என்று சுருக்கமாகச் சொல்லலாம். நீங்கள் சொன்னாலும் சொல்லாவிட்டாலும், பெரியார் அவர்கள் சொல்லத்தான் செய்வார் "ஒரு டஜன் பேர் சென்றால் போதுமா?" என்று. நமது ஐம்பெரும் தலைவர்களை "பஞ்சபாண்டவர்கள்" என்று அழைத்த அவர்கள், இந்த 12 சட்டசபை உறுப்பினர்களையும் "ஆழ்வார்கள்" என்று நிச்சயம் அழைக்கவும் செய்யலாம். ஆனால் நான் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன், இந்த 12 பேரும் ஆழ்வார்கள் என்றால், நாம் சட்டசபைக்குச் செல்வது நமக்கு நாமே நாமம் போட்டுக் கொள்ள அல்ல; இந்த நாட்டைக் கெடுத்து வரும் சதிக்கூட்டத்தாரின் நெற்றியில் நாமம் சாத்தத்தான்!

குளித்தலைத் தொகுதிக்கு நான் அபேட்சகனாக நின்று—ஒரு மாத காலமாக உங்கள் ஆதரவுக்காக சுற்றி—பல கூட்டங்களில் பேசி–இன்று 22,000 ஓட்டுகள் பெற்று வெற்றி அடைந்திருக்கிறேன். இருந்தாலும் முழு மகிழ்ச்சி அடைய நான் தயாராக இல்லை ஏனெனில் என்னை வெறுப்பவர்கள்—நான் சட்டசபைக்குச் செல்லக்கூடாது என்று கருதுபவர்கள் இந்த இன்னும் 14,000 பேர் இருக்கிறார்கள். ஆகவே இந்தத் தொகுதியிலே என் தொண்டு—என் பணி இனி மேல்தான் மிகமிக அதிகம் நடைபெற்றாக வேண்டும். அந்த 14,000 பேர் நான் சட்டசபைக்குச் செல்லக்கூடாது என்று கருதிய காரணத்தால்—காங்கிரஸ் இந்த நாட்டிலே பல கேடுகளைச் செய்திருந்தும் கூட; காங்கிரஸ் இந்த நாட்டு மக்களுக்கு இழைத்த அநீதிகளை அறிஞர்கள் பல்லோர் எடுத்துக் காட்டியும்கூட — "அந்தக் காங்கிரஸ் வந்தாலும் வரட்டும்; கருணாநிதி மட்டும் வரக்கூடாது!" என்று கருதி, காளை மாட்டுப் பெட்டியிலே தங்கள் ஓட்டுகளைப் போட்டிருக்கிறார்கள். ஆகவே அந்த 14,000 பேரையும் நான் திருத்தியாக வேண்டும்; அவர்களுக்கு நல்லவனாக நடந்து கொண்டாக வேண்டும்; அடுத்த தேர்தலிலே நான் நின்றால், அந்த 14,000 ஓட்டுகளும் என்னுடைய 'உதய சூரியன்' பெட்டியிலேயே விழுந்தாக வேண்டும்!

நான் வெற்றிபெற கிடைத்த வாக்குகள் 22,000. அவர்கள் வேண்டுமானால் மகிழ்ச்சி அடையலாம்; அவர்கள் தாங்கள் விரும்பிய ஒருவனைத் தேர்ந்தெடுத்து விட்டார்கள்; நினைத்ததை செய்து முடித்த மகிழ்ச்சி



ஆசிரியர் மு. க. அவர்கள் குளித்தலைத் தொகுதியிலிருந்து சென்னை சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதை ஒட்டி, 17—3—57 அன்று நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் ஆற்றிய சொற்பொழிவு இங்கே தரப்படுகிறது.



# ஓட்டுகள் பெற்றேம்!

அவர்களுக்கு. ஆனால் நான் முழு மகிழ்ச்சி அடைய முடியவில்லை. ஆகவேதான் என்னை விரும்பாத அந்த 14,000 பேருக்கு நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்; நீங்கள் எனக்கு ஓட்டுப் போடாத காரணத்தால்—என்னை விரும்பாத காரணத்தால் — நிச்சயமாக நான் உங்களுக்குப் பகைவனாக இருக்க மாட்டேன்! இந்த 22,000 பேருக்கு எப்படி உண்மையுள்ள பணியாளனாக இருந்து பணியாற்றி வருவேனோ, அதைப் போலவே தான் உங்கள் 14,000 பேருக்கும் கடமை மறவாத ஊழியனாக இருந்து பணியாற்றுவேன் என்று உறுதி தருகிறேன்!

அது போலவே இன்றைய தினம் இத்தொகுதியில் என்னோடு போட்டியிட்டுத் தோற்றவர்கள் — தோற்றவர்கள் என்று சொல்லவே நாக் கூசுகிறது—வெற்றி பெறாத தோழர்கள்—என் நண்பர்கள்தான்; இத்தொகுதியில் நான் தொண்டு செய்யும்போது என்னோடு ஒத்துழைக்க வேண்டியவர்கள். ஏனெனில் கருணாநிதியுடன் அவர்கள் செய்த போட்டி குத்துச் சண்டையோ மல்யுத்தமோ அல்ல; ஜனநாயக ரீதியில் போட்டியிட்டுக் கொண்டோம்; மக்கள் சக்தி—மக்கள் தீர்ப்பு—எனக்கு வெற்றியைத் தந்தது. ஆகவே என்னோடு போட்டியிட்டவர்கள், என் விரோதிகள் அல்ல; விரோதிகளாகவும் ஆக மாட்டார்கள்! அந்த நம்பிக்கை எனக்கு நிறைய இருக்கிறது. இன்றைய தினம் நான் ஊர்வலமாக வந்த நேரத்தில், என்னோடு போட்டியிட்ட ராஜகோபால அய்யங்கார் என்ற ஒரு தோழர் எனக்கு முழு மகிழ்ச்சியோடு மாலை அணிவித்து வாழ்த்தினர். ஒரு வேளை, அவர் 'கைச் சின்னம்' கொண்டிருந்த அபேட்சகர்; அதனால்தான் தன் கையால் மாலை சூட்டினார் என்று கருதலாம். அதைப் போலவே மற்ற சின்னங்களைக் கொண்டிருந்த தோழர்களுக்கும் கைகளிருக்கின்றன—கருத்திலே தெளிவு இருக்கிறது — கருணாநிதியிடம் நிறைய அன்பு இருக்கிறது— என்று காட்டிக் கொள்ள மாலையிட்டு மரியாதை செய்ய வேண்டாம்; நான் இத் தொகுதியில் மக்களுக்குத் தொண்டு செய்யும்போது தோளோடு தோள் நின்று, உதவி செய்து, ஒத்துழைக்கக் கோருகிறேன்.

தலைவர் அவர்கள் பேசும்போது குறிப்பிட்டார்கள், என்னைப் பற்றி யார் யாரோ ஏதேதோ பேசினார்கள் என்று! தேர்தல் நேரத்தில் அப்படிப் பேசத்தான் வேண்டும்! ஏனென்றால் எப்படியாவது தான் தேர்தலில் வெற்றி பெற்றாக வேண்டும் என்ற ஆசை எல்லோருக்கும் இருக்கத்தான் செய்யும். 'எப்படியாவது வெற்றி பெற்றே தீர வேண்டும் என்பதற்காக எதையாவது பேசாதே' என்ற ஆணைக்குக் கட்டுப் பட்டவர்கள் நாம் மட்டும்தான்; அப்படி கண்ணியம் மீறாமல் கட்சி நடத்துபவர்களும் நாம்தான்!

ஆனால் பேசியவர்களில் பலர் சுயேச்சைகள்! அவர்களைக் கட்டுப்படுத்த – அவர்களுக்குக் கண்ணியத்தைக் கற்பிக்க யாருமே கிடையாது!

வேறு சிலர் காங்கிரஸ் தோழர்கள்; அவர்களோ கட்டுப்பாட்டை மீறி—கடமையை மறந்து நீண்ட நாட்களாகி விட்டன! ஆகவே அத்தகைய துர் பாஷைகளை—தேவையற்ற வார்த்தைகளை தேர்தல் கால வெற்றிக்காக மட்டுமே பயன்படுத்தியதாகக் கருத வேண்டும்; தவிர, கருணாநிதி அவர்களது பகைவன்; அவனைப் புண்படுத்த வேண்டும் என்பதற்காக சொல்லப்பட்டவை அவை என்று நினைக்கவே கூடாது!

இந்தத் தேர்தலிலே திராவிட முன்னேற்றக் கழகம் 100 இடங்களுக்கு மேல் போட்டியிட்டு, இதுவரை 12 இடங்களையே கைப்பற்றியிருக்கிறது என்றாலும், நாட்டு மக்கள் உள்ளத்திலே அது எத்தகைய நல்லிடத்தைப் பெற்றிருக்கிறது என்பதை நீங்கள் நன்கு உணருவீர்கள். கேட்கிறேன் நான், எந்த நாட்டு சரித்திரத்திலேயாவது நீங்கள் இந்த விசித்திரத்தைக் கண்டிருக்கிறீர்களா? வெற்றி பெற்றவர் வீராப்போடு நிமிர்ந்து நின்று—விழிகளிலே களிப்பும் மொழியிலே புதிய உற்சாகமும் தோன்ற மக்களைப் பார்த்து— அவர்களிடமிருந்து வாகை மாலைகளை சூட்டிக் கொள்வார்கள்; இது உண்மை! ஆனால் எங்காவது கேள்விப் பட்டிருக்கிறீர்களா, தோற்றுப் போனவர்கள் மளமளவென்று மக்கள் மத்தியிலேவந்து "நான் ஏன் தோற்றேன்?" என்று விளக்குவதை! எந்த நாட்டுச் சரித்திரத்திலும் காண முடியாத இந்த வியக்கத்தக்க விசித்திரத்தை இந்த நாட்டுச் சரித்திரத்திலேதான்; அதுவும் திராவிட முன்னேற்றக் கழகத்தவர்களிடத்தில் மட்டுமே தான் காண முடியும்! இப்போது இந்த மேடையிலே தோற்றுப் போனவர்கள் வரிசையாக வந்து பேசினார்கள் என்றால், அதற்கு என்ன அர்த்தம்? காங்கிரஸ்காரர்கள் தோற்றார்கள் என்றால் இப்படி வந்து பொது மேடையிலே பேசவே மாட்டார்கள்! காரணம், அவர்கள் தோற்று ஓடும்போது முதுகிலே காயம் தாங்கியவர்களாக இருப்பார்கள்; மக்களிடையே வந்து அந்த முதுகைக் காட்ட அஞ்சுவார்கள்! ஆனால் என் நண்பர்கள் எல்லாம்—திராவிட முன்னேற்றக் கழகத்தின் சிங்கங்கள் எல்லாம் — தோற்றவர்களாக இருந்தாலும் — உங்களிடையே துணிவோடு வந்து பேசுகிறார்கள்! ஆமாம்; அவர்கள் மார்பிலே காயம் தாங்கியவர்கள்! மறத் தமிழர் பரம்பரையிலே வந்தவர்கள்! ஆகவேதான் "பாருங்கள்; பாருங்கள்! மாதாக்களே! பிதாக்களே! புறநானூற்று வழி வந்தோரே! நாங்கள் பெற்ற காயம் மார்பில்; முதுகிலல்ல!" என்று தைரியத்துடன் மேடையில் கூறி தங்கள் பெருமையை உயர்த்திக் கொள்ளுகின்றனர். ஏனெனில் தோற்றவர்—வென்றவர் என்ற வேறுபாடின்றி தொண்டு செய்யும் மனப்பான்மை கொண்டவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தினர்!

காங்கிரசிலே ஒருவர் தோற்றார் என்றால்...?

சென்ற தடவை திரு குமாரசாமி ராஜா தோற்றார்—இப்போது இறந்து விட்டார்—அன்று என்ன ஆயிற்று? தோற்றார்; கவர்னரானார்!

பொன்னேரியிலே திரு பக்தவத்சலனார் தோற்றார்; என்ன ஆயிற்று? மந்திரியானார்!

இப்படிக் காங்கிரசிலே தோற்றவர்கள் கவர்னர்களாகவும், மந்திரிகளாகவும் ஆகிறார்கள்! ஆனால் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் தோற்றாலோ நல்ல செயல் வீரர்களாக—நல்ல பேச்சாளர்களாக மாறுகிறார்கள்!

நமது கரூர் தோழர் குழந்தையை எடுத்துக் கொள்ளுங்களேன்.

தோல்விதான்; ஆனாலும் என்ன ஆயிற்று? அவர் தோல்வியுற்றார் என்பதால் நாம் அவரை இயக்கத்தை விட்டு விலக்கியா விட்டோம்? இல்லை: இல்லை; நாம் அவரை அனுப்பத் தயாராக இல்லை! அவர் போகவும் தயாராக இல்லை! அவர், தான் தோற்ற மறுநாள் நாமக்கல் சென்று—தமிழ்நாட்டிலே மிகப் பெரிய தொகுதியும் எட்டு லட்சம் வாக்காளர்களைக் கொண்டதுமான அவ்விடத்தில் போட்டியிடும் நமது சொல்லின் செல்வர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் 25,000 ஓட்டுகள் அதிகத்தில் காங்கிரசை முறியடித்தார் என்பதை அறிந்து அவரைப் பாராட்டி விட்டு-பிறகு 'குளித்தலையிலே கருணாநிதியின் சேதி என்ன?' என்ற ஆவலுடன் இன்று காலையிலேயே இங்கு வந்து — என்னுடனேயே இருந்து–எனது மகிழ்ச்சியிலே பங்கேற்று—பல கிராமங்களுக்கும் பட்டி தொட்டிகளுக்கும் என்னுடனேயே வந்திருந்தார் என்பதோடு—இனி தான் தீவிரமாகப் பணியாற்றப் போவதாகவும் உறுதி தருகிறார். ஆகவே அவர் தோற்றார்; செயல் வீரரானார்!

தோழர் செழியனை எடுத்துக் கொள்வோமே — அவரை ஒரு நல்ல எழுத்தாளராகத்தான் நீங்கள் தெரிந்து கொண்டிருந்தீர்கள்; அவர் பேச்சாளராக இருந்ததில்லை. சென்ற முறை நான் இங்கு பேசியபோது

## தாமதமான தெளிவு!

"திராவிடர் கழகத்தாரின் தேவைகளைப் பூர்த்தி செய்ய இவராலும் (காமராசராலும்) முடியாது; இவரது தலைவரான நேரு அவர்களாலும் முடியாது."

"திராவிடர் கழகத்துக்கு திரு காமராசர் அவர்கள் என்ன உதவி செய்தார்? கழகத்தின் நாடகங்களைத் தடுக்காமல் விட்டாரா? இராமன் பட எரிப்புக் கிளர்ச்சிக்காரர்கள்மீது நடவடிக்கை யெடுக்காமல் விட்டாரா? "பார்ப்பானே வெளியேறு" என்ற நூலைப்பறிமுதல் செய்யாமல் விட்டாரா?"

-"விடுதலை" (18-3-57)

# காங்கிரசின் நிழல் கம்யூனிஸ்டுகள்!






அவரும் பேசினார். ஆனால் எத்தனைத் தடங்கல்கள்; தட்டுத் தடுமாற்றங்கள் - சிந்திப்பதற்கும் பேசுவதற்குமிடையே எவ்வளவு நேரம் எடுத்துக் கொண்டார்—என்பதெல்லாம் உங்களுக்கு நன்றாகத் தெரியும். ஆனால் இடையில் ஒரு மாத காலம் பேசினார்; இப்போது உங்களிடையே மிகவும் அழகாக, கருத்தாழத்துடன், அறிஞர் அண்ணா அவர்களின் பேச்சுக்கு ஈடாகப் பேசுகிறார் என்றால் என்ன பொருள்? அவர் தோற்றார்; பேச்சாளரானார்!

தோழர் அவரக்குறிச்சி ரத்தினமும் தோற்றார்; ஆனால் "உடனடியாக என் தொகுதியிலே நூறு கிளைக் கழகங்கள் ஏற்படுத்தி விட்டுத்தான் மறு வேலை பார்ப்பேன்"—என்கிறார்; உணர்ச்சியோடு!

மதுரை முத்து சொல்கிறார் 'பணமும் பாவையும்' கொண்டு தான் தன்னை வெற்றிபெற இயலாது செய்து விட்டது காங்கிரஸ் என்று! நான் நினைத்தேன்; 'பணமும், பாவையும்' என்றொரு புத்தகம் யாரோ ஒருவர் எழுதியிருக்கிறாரே; அதைக் கொடுத்துத்தான் ஓட்டுப் பெற்றார்களோ என்று! அதுவல்லவாம்; ஓட்டுக்காக பணம் தந்தனர் காங்கிரசார் என்பதோடு; மதுரைக்கு அருகிலுள்ள காந்தி ஆசிரமத்திலிருந்து கூட்டம் கூட்டமாகப் பாவையர் வந்து ஓட்டு கேட்டார்களாம் காங்கிரசுக்காக! அப்படி இருக்கையில் முத்து சென்றால் எப்படி கிடைக்கும் ஓட்டு? ஆகவே அவர் தோற்கடிக்கப் பட்டார்; ஆனாலும் இன்று என் வெற்றி விழாவிலே கலந்து கொள்ள ஓடி வந்திருக்கிறார்!

முசிரியிலே முத்துக்கருப்பன்—அங்கு கழகம் வளர்ந்திருக்கும் நிலையில் — அவருக்கிருக்கும் குறைந்த வசதியில் குறைவான எண்ணிக்கை ஓட்டுக்கள்தான் பெறுவார் என்று கருதினோம். 2,000 ரூபாய்தான் செலவாம்—சர்க்காரே 12,000 செலவு செய்யலாம் என்கிறது—அதில் 6-ல் ஒரு பங்குதான் செலவு; ஆனால் பெற்ற ஓட்டுகளோ 20,000! ஆகவே இன்னும் கொஞ்சம் செலவு செய்ய வசதி இருந்திருந்தால் நிச்சயம் வெற்றி பெற்றிருக்க முடியும் அவர்!

லால்குடியிலே அம்பில் தருமலிங்கம்; அவரும் தோற்றிருக்கிறார். நான் 3-ம் தேதியன்று அவருக்காகப் பேசினேன். அப்போது வெற்றி அவர் கையில் இருப்பதைக்கண்டேன். ஆனால் அவர் முதல்நாள் இரவு சிறிது நேரம் தூங்கிவிட்டார். அவர் தூக்கத்திலே சிறிது சாமர்த்தியசாலி—ஆனால் சட்டசபையிலே தூங்கக் கூடியவர் அல்ல—அன்றென்னவோ தூங்கி விட்டார். அண்ணா அவர்கள் இங்கு பேசினார்களே. "10-ம் தேதியன்று பாதி ராத்திரியிலே சில குள்ள நரிகள் பதுங்கிப் பதுங்கி வரும் பணத்தோடு! தூங்கிவிடாதீர்கள் தோழர்களே!" என்று! அதைப் போலவேதான் தருமுவின் அந்தத் தூக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு, கையில் ஒன்று இரண்டு என்றல்ல; 10, 5 என்று ரூபாய் நோட்டுக் கத்தைகளை எடுத்துக் கொண்டு தொகுதிக்குள் புறப்பட்டு விட்டார்கள் சூதுக்காரர்கள் சிலர்! அதனால்தான் அம்பில் கிட்டத்தட்ட 4,000 ஓட்டுகள்வித்தியாசத்தில் தோற்று விட்டார்!






திருச்சியிலே தோழர் எம். எஸ். மணி தோற்றார் என்றால் அவர் பெற்ற ஓட்டுகளோ 40,000! செலவு ரூ. 400 அல்லது 500 தான் இருக்கும்! அதிலேயே 'டெபாசிட்' கட்டியிருக்கிறார்; அது திரும்பி வந்துவிடும்! அவர் 500 ரூபாய்தான் செலவு செய்தார் என்றால், இன்று ஒவ்வொரு ரூபாயும் ஒவ்வொரு கிளைக் கழகமாக, அந்தத் தொகுதியில் 500 கிளைக் கழகங்கள் தோன்றக்கூடிய அளவுக்கு பணியாற்றி யிருக்கிறார்! இத்தனைக்கு என்ன வசதி இருந்தது அவருக்கு? தேர்தலுக்கு இரண்டு நாட்களுக்கு முன்பு ஒரு ஓட்டைக் கார் ('டப்பா') வந்தது அவருக்கு! நீங்கள் 'திரும்பிப்பார்' படத்திலே பார்த்திருப்பீர்களே, அதுபோல அவர் எங்காவது கூட்டத்திற்கு அந்தக் காரில் சென்றால், அது எழுப்பும் 'படபட'என்ற சத்தத்தைக்கேட்டு, போலீசார் துப்பாக்கிப் பிரயோகம்தான் செய்கிறார்களோ என்று மக்கள் அஞ்சுவார்கள். அந்தக் காரை நம்பி அடுத்த ஊர் கூட்டத்துக்குப் புறப்பட்டு விட்டால், நடு வழியிலேயே நின்றுவிடும் கார்! அதே சமயம் கூட்டம் ஏற்பாடு செய்த தோழர்களோ "இவர்கள் இப்படித்தான்; இவர்களுக்கா ஓட்டுத் தருவது?" என்று கோபித்துக் கொண்டு விடுவார்கள். இப்படியாக பஸ்ஸிலும், ஏன்; சைகிளிலும் — உண்மைதான் தோழர்களே! பார்லிமெண்ட் தொகுதியில் சைகிள் வைத்து வேலை செய்த இந்தியாவிலேயே ஒரே மனிதர் நமது மணிதான்!

இப்படியாக, மிக மிகச் சாமான்யர்களைக் கொண்ட நம் கழகம் மிகத் துணிச்சலாக 120 இடங்களில் போட்டியிட்டது; எல்லா இடங்களும் கிடைக்கவில்லை என்றாலும் காங்கிரசுக்கு அடுத்தபடி தி. மு. க. என்ற நிலையை தோற்றுவித்துவிட்டது. ஓரிடத்தில் காங்கிரஸ் 30,000 ஓட்டுகளில் வென்றது என்றால், அடுத்தபடியாக 29,900 ஓட்டுகளில் இரண்டாவது இடம் பெற்று தோற்றிருக்கிறது தி. மு. கழகம்!

சென்னையிலே தோழர் என். ஜீவரத்தினம் 400 ஓட்டுகளில் தோற்றார்—பன்மொழிப் புலவர் அப்பாதுரையார் 800 ஓட்டுகளில்!

விழுப்புறம் தோழர் சண்முகத்தின் தோல்வி 700 ஓட்டுகளில்!

ஆம்பூரிலே நமது அபேட்சகர் சம்பங்கி 400 ஓட்டுகளே குறைந்த காரணத்தால் தோற்றிருக்கிறார்!

இதற்கெல்லாம் என்ன காரணம்? நம்மிடம் பணமில்லை; கடைசி நேரத்தில் குறுக்கிடும் அத்தியாவசியமான செலவு கூட செய்ய முடியாது போய் விடுகிறது. ஆனாலும் ஒன்று; குறிப்பிட்ட ஓரிடத்திற்குச் செல்ல 30 படிகள் என்றால், நாம் 29 படிகள்வரை சென்று விட்டோம் - ஒரு படிதான் பாக்கி! அதையும் தாண்டிவிட நமக்கு உதவும், இந்தத் தேர்தலில் நாம் பெற்றிருக்கிற அனுபவம்!

நாம் இந்தத் தேர்தலில் பெற்ற ஓட்டுகள் சாதாரணமானவையல்ல; நமது ஓட்டுகள் துல்லியமானவை — தூய்மையானவை—திராவிட முன்னேற்றக் கழகத்திற்குப் போடப்பட்டவை!

ஆனால் காங்கிரஸ் பெற்ற ஓட்டுகளிலோ கம்யூனிஸ்டுகளின் ஓட்டுகள் கலந்திருக்கின்றன; காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டியாரின் ஓட்டுகள் கலந்திருக்கின்றன; தமிழரசுக் கழகத்தாரின் ஓட்டுகள் கலந்திருக்கின்றன; சோஷலிஸ்டுகளின் பிரஜா சோஷலிஸ்டுகளின், ஓட்டுகள் கலந்திருக்கின்றன. அத்துடன் திராவிடர் கழகத்தின் ஓட்டுகளும்கூட கலந்து விட்டிருக்கின்றன!






அடுத்த தேர்தலிலே இன்று காங்கிரசுக்குக் கிடைத்த ஓட்டுகளிலிருக்கும்,

திராவிடர் கழக ஓட்டுகள் பிரிந்து—

கம்யூனிஸ்டுகளின் ஓட்டுகள் பிரிந்து—

இன்னும் மற்ற மற்ற கட்சிகளுக்கான ஓட்டுகளும் பிரிந்து—

காங்கிரசின் ஓட்டுகள் மட்டுமே தனித்து நின்றால், திராவிட முன்னேற்றக் கழகத்தை அது வென்றுவிட முடியுமென்று கருதுகிறீர்கள்?

சேலத்திலே நமது பொதுச் செயலாளர் அவர்களின் தோல்விக்குக் காரணமாக இருந்தவையே இத்தகைய ஓட்டுகள்தானே! தி. மு. க. வுக்கு அங்கு 24,000 ஓட்டுகள் கிடைக்கும்; கம்யூனிஸ்டுகளுக்கு ஏதோ 5,000 அல்லது 6000 ஓட்டுகள் கிடைக்கும்; மிகுதி 21 000 ஓட்டுகள் காங்கிரசுக்குக் கிடைக்கும். எனவே, 3,000 ஓட்டுகள் வித்தியாசத்தில் நமது பொதுச் செயலாளர் நிச்சயம் வெற்றி பெறுகிறார். என்றுதான் சேலமே சொல்லியது. ஆனால் என்ன ஆயிற்று? நினைத்தபடி தி. மு க. வுக்கு 24,000 ஓட்டுகள் கிடைக்கத்தான் செய்தன. ஆனால் தேர்தல் தினத்தன்று காலை முதல் வேலை செய்து வந்த கம்யூனிஸ்டு தோழர்கள், 12-மணிக்கு தங்கள் நிலைமையை ஆராய்ந்தனர். அப்போதைய நிலவரத்தில் தங்களுக்கு 'டிபாசிட்'டே வராது என்பதை உணர்ந்தனர். உடனே பிற்பகல் ஓட்டுப் பதிவின்போது கம்யூனிஸ்டுகளுக்கு விழவேண்டிய அந்த ஓட்டுகளை 'கம்யூனிஸ்டுகளுக்கு வேண்டாம்; தி. மு. கழகத்துக்கும் வேண்டாம்; அதையும் காங்கிரசுக்கே போட்டுவிடுங்கள்' என்று கட்டளையிட்டனர். தோழர் பி. ராமமூர்த்தி அவர்களிடமிருந்தே வந்தது அந்த உத்திரவு! அதன்படி அந்த மீதி ஓட்டுகளும் காங்கிரசுக்கே விழுந்ததால்தான்—நமது பொதுச் செயலாளரை அத்தகைய பெரிய விரோதியாக அவர்கள் கருதிய காரணத்தால்தான் – காங்கிரசுடன் அவர்கள் கொண்ட அந்தப் புதிய, திடீர் உறவின் காரணத்தால்தான் — அங்கு நாம்

✽ தொடர்ச்சி 12-ம் பக்கம்.

## முற்றிலும் உண்மை!

"இன்று தமிழ் நாட்டில் திரு காமராசர் அவர்களை ஆதரிப்பதற்காக ஒரு தினசரிகூட இல்லை. 'விடுதலை' ஒன்று தான் இருக்கிறது."

—"விடுதலை" (18—3—57)






★

பேராசிரியர்; பேராசை கொண்ட ஏக பாரதப் புத்திரரை பெரு நஷ்டக்காரராக்க வந்திருக்கும் அன்பழகனார்! (எழும்பூர்)

★

## நன்றி அறிவிப்பு

குளித்தலைத் தொகுதியில் தி. மு. க. அபேட்சகனாக நின்ற என்னை ஆதரித்த வாக்காளர் பெருமக்களுக்கும்; குறிப்பாக தண்ணீர்பள்ளி - ராஜேந்திரம் பெண்கள் ஓட்டுச்சாவடியில் மாட்டுப் பெட்டியில் ஒரு ஓட்டுக்கூட போடாமல் காலியாக்கி வைத்திருந்த தாய்மார்களுக்கும்; இரவு பகல் பாராது உழைத்த கழகத் தோழர்கட்கும்; பெரியோர்கட்கும்; உடனிருந்த நண்பர் கட்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கோள்கிறேன்.

அன்பன்,
மு. கருணாநிதி

## எப்போதுமே இதுதான் பழக்கம்!

★

பெரியார் அவர்கள் எப்போதுமே ஆள்பவர்கள் பக்கமே ஆதரவு காட்டுவார் என்பதற்கு இதோ 'விடுதலை' தரும் ஆதாரம்—

"தலைவர் பெரியார் அவர்கள் திரு. ஓமந்தூர் ரெட்டியார், திரு. குமாரசாமிராஜா, திரு. ஆச்சாரியார் ஆகிய மூன்று முதல் அமைச்சர்களையும் ஆதரிக்கவில்லையா? அப்போதெல்லாம் எவரையாவது எந்த நிபந்தனையாவது கேட்டதாக யாராவது கூற முடியுமா?"

-"விடுதலை" 18-3-57.




## நன்றியும் வணக்கமும்

சென்னை சட்டசபைத் தேர்தலில் தேனித் தொகுதியில் இரவு பகல் எனப் பாராது எனக்காக உழைத்த எனது உற்ற நண்பர்களுக்கும், தி. மு. க. ஊழியர்களுக்கும், மாற்றுக் கட்சித் தோழர்களுக்கும், குறிப்பாகப் பெரியோர்களுக்கும், தாய்மார்களுக்கும், பல்லாயிரக் கணக்கான பொது மக்களுக்கும் எனது இதயங் கனிந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அரசியலிலே மனத் தூய்மையற்ற துரோக சக்திகளின் குறுக்கீடு காரணமாக, எனக்கு வெற்றி கிடைக்காமற் போனாலும், 31 404 வாக்காளர்கள் எனக்கு வாக்களித்து என்னைப் பெருமைப் படுத்தியுள்ளார்கள். அவர்களுக் கெல்லாம் என் உளம் நிறைந்த நன்றியும் வணக்கமும். இந்த மாபெரும் மக்கள் சக்தியின் நேசத்தையும் பாசத்தையும் நான் மறக்க மாட்டேன். இழக்க மாட்டேன். தொடர்ந்து தேனித் தொகுதி மக்களுக்கும் நான் பிறந்த பொன்னாட்டுக்கும் தூய பணி ஆற்றுவேன்.

என்றும் உங்கள்,
எஸ். எஸ். ராஜேந்திரன்.

## நன்றி அறிவிப்பு

சென்னை சட்டசபைக்கு எழும்பூர் தொகுதியிலிருந்து போட்டியிட்ட என்னை அன்புடன் ஆதரித்து வெற்றிபெறச் செய்த எல்லோருக்கும் எனது உளம் நிறைந்த நன்றி உரித்தாகும். தங்கள் ஒவ்வொருவரையும் நேரில் கண்டு தெரிவிக்கும் நன்றியறிதலாக இதனைக் கொள்ள வேண்டுகிறேன். எனது தொகுதி மக்களாகிய தங்களின் நம்பிக்கைக்கு உரியவனாகிய எனக்கு தொகுதியின் முன்னேற்றத்துக்கான சிறந்த ஆலோசனைகளைத் தந்து உதவுவதுடன் மேலும் ஒத்துழைத்து ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். நமது வட்டத்தின்குறைகளைக் களையவும், மக்கள் விருப்பத்தை நிறைவேற்றவும் திராவிட முன்னேற்றக் கழகத்தவன் என்ற நிலையில் சட்டசபையில் கடமையைத் தவறாது செய்து வருவேன்.

எனது வெற்றிக்கு அயராது பாடுபட்ட தோழர்கள், தாய்மார்கள், பெரியோர்கள் ஆகிய அனைவர்க்கும் எனது உளங்கனிந்த நன்றி என்றும் உரித்தாகும். என் வெற்றி தங்கள் வெற்றியே!

தமிழும் தமிழரும் முன்னேற ஒல்லும் வகையெல்லாம் பணி புரிவேன் என்ற உறுதியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்,
க. அன்பழகன்

சாரதி (வேலூர்): வேலூர் நகர சபை உறுப்பினர். நம் விடுதலைத் தேருக்கு இவரும் ஒரு சாரதி!



சொந்த நலனுக்காக வன்னியரை விற்றுவிட்ட வன்னெஞ்சகர்களின் வைரி; கொடுங்கோலர் ஆட்சியினால் 'கோ' என்று கதறி அழும் பாட்டாளிகளின் பிரதிநிதி, ஏ.கோவிந்தசாமி (வளவனூர்).



• ஆசைத்தம்பி (ஆயிரம்விளக்கு): அண்ணாவின் ஆசைத்தம்பிகளுள் ஒருவர்; தாயகத்தின் மீட்சிதான் இவர் ஆசையெல்லாம்!



மக்கள் நலனே எனது நலன்; இது சத்தியமே — என்று கூறும் சத்தியவாணிமுத்து (பேரம்பூர்).



# காசுக்கு ஓட்டா?

“தேர்தல் தினம் உங்களுக்கெல்லாம் ஒரு திருநாள் போல! ஆனால் இந்தத் திருநாள் வருடா வருடம் வராது; ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறைதான் வரும்! திருநாள் என்றால் நீங்கள் கோவிலுக்குப் போவீர்களே, அதைப் போல தேர்தல் தினத்தன்று ஓட்டுச் சாவடிக்குச் செல்ல வேண்டும். உங்களுக்கு நன்மை விளைய- நலன் கிடைக்க-நல்லவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும்; ஓட்டுப்போடவேண்டும்!”

‘மைக்’ இப்படி அலற—கொடி கட்டிய கார் ஒன்று அந்தக் கிராமத்திற்குள் புகுந்தது.

உலகப் பெரும் அதிசயங்கள் ஏழு இருக்கின்றன என்று நாம் படித்திருக்கிறோமே — அவை எவை? அவைகளைப் பார்க்க வேண்டாமா? — என்றெல்லாம் ஆசைப்படாத கிராம மக்களின் கூட்டம், தாம் காண வேண்டிய ஒரே உலக அதிசயம் அந்தக் கார் தான் என்பதுபோல அதைச் சுற்றி வியப்போடு கூடியது!

அப்புழுதி படிந்த காரின் கதவு திறந்தது. இரு கை கூப்பி வணக்கம் செலுத்திக் கொண்டே காரிலிருந்து இறங்கினர் ஒருவர்.

சுற்றிலும் ஓட்டைக் குடிசைகள்; வறுமை தலைவிரித்தாடும் பயங்கரக் காட்சி! அவர் கண்கள் கலங்கின. கிராமத்து மக்களை— ‘இந்த நாட்டு மன்னர்களை’ ஒரு முறை நோக்கினர். ஆப்பிரிக்கக் காடுகளில் வாழ்ந்த காட்டு மனிதர்கள்கூட நலமோடு வாழ்கிறார்களே; “இந்த நாட்டின் உயிர் நாடியே கிராமங்கள்தான்” என்று புகழப்பட்ட ‘நம்மவர்’களின் நிலை இப்படியா? அபபப்பா! என்ன கோரம்! அந்த ‘அன்றாடங் காச்சி’களின் அவலக் காட்சி அவரது கண்களில் கண்ணீரையே வரவழைத்து விட்டது.

“தாய்மார்களே! பெரியோர்களே! என்னைத் தெரிகிறதா உங்களுக்கு? நான்தான் ‘உதய சூரியன்’ பெட்டிக்காரன்! உங்களிடையே ஆதரவு கேட்டு வந்திருக்கிறேன்!...எனக்கு ஓட்டுப் போட்டால் உண்மையில் உங்களுக்கு நல்லது செய்வேன்!...”

கிராம மக்கள் விழிகள் அகல, மொழியிலே உறுதி கலந்து அவர் பேசியதைக் கேட்டுக் கொண்டேயிருந்தார்கள்.

அதற்குள் காரிலிருந்து ‘வேண்டுகோள்’ என்று அச்சிட்ட காகிதங்களை மக்களுக்கு எடுத்துக் கொடுத்தார் ஒரு தொண்டர்.

O

காட்டுப் பாதையில் ஆடி அசைந்து கொண்டு சென்று விட்டது கார்! கிராமத்து மக்கள் ஏதேதோ பேசிக் கொண்டு கலைந்துபோய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் ஒரே ஒரு சிறுமி மட்டும் அந்த இடத்தைவிட்டு நகரவில்லை. அதுமட்டுமல்ல; தன் கையிலிருந்த ‘வேண்டுகோளை’ எழுத்துக் கூட்டிப் படித்துக் கொண்டிருந்தது.

நின்றபடியே அதைப் படித்து முடித்த அதற்கு நேரம் போனதே தெரியவில்லை. “கமலா! கமலா!...” என்று அழைத்துக் கொண்டே அப்பெண்ணின் அப்பா அங்கு வந்தபோதுதான் நிமிர்ந்து பார்த்தது.

“என்னம்மா, இங்கேயே நின்னுட்டே! ஒரு மணியா நான் காத்துக்கிட்டிருக்கேன் வீட்ல...”

“அப்பா! நான் இதை முழுக்க முழுக்கப் படிச்சுட்டேம்பா!—நம்ப ஓட்டையெல்லாம் இப்ப வந்தாரே, அவருக்குத்தாம்ப்பா போடணும்!...”

“ஏம்மா?...”

“உனக்குத் தெரியாதாப்பா! முந்தி புயலடிச்சுதே உனக்கு ஞாபகமிருக்காப்பா? நம்ப சொந்தக்காரருகூட ஒருத்தர் செத்துப் பூட்டாருன்னு அழுதோமேப்பா, அப்ப இவங்க கட்சிதான் முப்பத்தி மூணு ஆயிரம்ரூபா நிதிவசூல் பண்ணி, துணியா வாங்கிக் கொடுதாங்களாம்ப்பா!”

“அப்புறம்?...”

“நெசவாளிங்கெல்லாம் பசி பட்டினியா கஷ்டப்பட்டப்போ, இவங்கல்லாம் துணி வித்து உதவி செய்தாங்களாம்ப்பா...இப்ப வந்தாரே சூரியன் பெட்டிக்காரரு, அவரு கூட ‘துணியோ துணி’ன்னு வித்தாராம்ப்பா......வேடிக்கையா இல்லே? அதனாலே நம்ப ஓட்டை எல்லாம் இவருக்குத்தானேப்பா போடணும்?...”

“சரி கமலா! இவருக்கே போட்டுடுவோம்!”

“ஆமாம்ப்பா! சூரியன் பெட்டிப்பா! மறக்கக் கூடாதுப்பா!”

O

“ஐயா, இந்த ஊரு ஆத்துலே தண்ணியே வரமாட்டேங்குது; கிணறும் கிடையாது; வெள்ளாமை எப்படி செய்யறது? அதுக்கு ஒரு வழி பண்ணணும் நீங்க!...”

“சரிம்மா! நிச்சயம் கவனிக்கிறேன்!”

மறுபடியும் அந்த கிராமத்துக்கு வந்திருந்த அந்த அபேட்சகரிடம் மக்கள் முறையிட்டுக் கொண்டிருந்தனர்.

“கொழைந்தங்க படிக்கிறதுக்கு சரியான பள்ளிக்கூடமே கிடையாதுங்க இங்கே...”

“உங்கள் தங்கக் குழந்தைகளின் எதிர்கால வாழ்வு தழைக்க அது மிக மிக அவசியம்! அதை நான் உணருகிறேன்; ஆவன செய்கிறேன்!”

“என்னை மெட்ருசிலே கொண்டுக்கிட்டுப் போயி பெரிய படிப்பு படிக்க வைக்கணுமே!...”

குரல் வந்த திசையைப் பார்த்தார் அவர். மறுகணம் அவர் தன்னையும் மீறி சிரித்துவிட்டார். அங்கே நின்று கொண்டிருந்தது கமலாதான்!

அந்த நாட்டுப்புற சிறுமியின் உள்ளத்திலே இந்த ஆசை எப்படித்தான் தோன்றியதோ—ஆடு, மாடு மேய்த்துக் கொண்டிருக்கும் தன்னை ஒத்த சிறுவர் சிறுமிகளினின்று அது எப்படித்தான் இப்படி மாறுபட்டுத் தோன்றுகிறது—என்ற வியப்பில் ஆழ்ந்துவிட்டார் அவர்.

சேரி மக்கள் கலைந்தனர். ஒருவர், அவர் தன் வீட்டிற்குள் நுழைந்ததைப் பெரும்பேருகச் சொல்லிக் கொண்டார்; தன் குடிசையிலே தண்ணீர் குடித்தது குறித்துப் பெருமைப் பட்டார் மற்றொருவர். கையெடுத்து வணங்கிய கண்ணியத்தை வியந்தார்கள் ஒரு வயதான மூதாட்டியார். ஆனால் அதே சமயம் எல்லாவற்றுக்கும் மேலாக அப்போது எல்லோருடைய உள்ளத்திலும் இடம் பெற்றிருந்தது ‘உதய சூரியன்’ பெட்டிதான்! தம்பி தங்கைகளோ கமலாவை “மெட்ராஸ் கமலா!” என்று உரக்கக் கூவி கிண்டல் செய்து கொண்டிருந்தார்கள்.

“உதயசூரியன் பெட்டி உங்களுடைய பெட்டி; நான் உங்களுடையவன்!” என்று அந்த அபேட்சகர் உரிமையுடன் சொன்ன அந்த சொற்கள் கமலாவின் காதுகளை விட்டு அகலவே இல்லை. குடிசையின் சுவற்றிலெல்லாம் அடுப்புக் கரியால் தனக்குத் தெரிந்த உதயசூரியன் படத்தைப் போட்டாள். “நுழையாதே! எங்கள் ஓட்டெல்லாம் உதயசூரியனுக்கே!” என்றும் எழுதினாள்.

இப்படித்தான் முடிவெடுத்திருந்தனர் அந்த கிராமத்து மக்கள். ஆனால் ஒரு குடம் தண்ணீரிலே ஒரு துளி நஞ்சு கலந்தாலும் விளைவு விபரீதம்தானே! அப்படித்தான் துல்லியமான — தூய்மையான முடிவோடு இருந்த அந்த மக்களின் நெஞ்சத்திலே நஞ்சு கலக்க வந்துவிட்டனர் வீணர்கள்!

விடிந்தால் தேர்தல்! ஆனால் அதற்கு முன்னிரவில்—நடுநிசியில்—கும்மிருட்டில் – அந்த கிராமத்திற்குள் வேக வேகமாக மாற்றுக் கட்சிக்காரனின் கார் ஒன்று திடீரென்று நுழைவானேன்? கொள்ளையடிக்க வருகிறதா? இல்லை; இல்லை; ஆனால் அதனினும் மேலான கொடுஞ்செயல் ஒன்று புரியத்தான் அழையாத விருந்தாளியாக வந்து சேர்ந்தது!

“மறந்து விடாதேப்பா! இருபது ரூபாய் தந்திருக்கிறேன், இரண்டு ஓட்டுக்கும்! உன் மனைவிக்கும் சொல்லி விடு!...ம்...தெரிகிறதா; என்ன பெட்டி? சொல் ஒரு முறை!...”

“தெரியும்! காளை மாட்டுப் பெட்டி!”

“ஆமாம்; கவனமிருக்கட்டும்! மாட்டுப்பெட்டியில் உன் ஓட்டு விழா விட்டால்...? ம்...என்ன நடக்கும் என்று என்னால் சொல்லத் தெரியாது!...”

கார் புறப்பட்டு விட்டது; மறைந்தும் விட்டது. பணத்தை இடையில் சொருகித் திரும்பினார் கமலாவின் அப்பா! மறுகணம் திடுக்கிட்டு விட்டார்! “என்னம்மா கமலா, நீ இன்னும் தூங்கலியா..?” என்று கேட்டார். பின்னால் சிலைபோல் நின்று கொண்டிருந்த கமலாவிடம்!

“திருடங்க வந்தாங்களே, எப்படியப்பா தூங்குவது?” என்றாள் கமலா.

“திருடர்களா? என்னம்மா இப்படிச் சொல்றே? இந்த பாரு, இருபது ரூபா தந்திருக்காங்க. நாளைக்கே உனக்கு புது சொக்கா, புதுப் பாவாடை, புது சிலேட், புத்தகம் எல்லாம் வாங்கியாந்து...”

“ஐயையோ! வேண்டவே வேண்டாமப்பா! அது கள்ளப் பணம்: களங்கம் உள்ள பணம்! சூரியன் பெட்டிக்காரர் சொன்னாரே மறந்துட்டிங்களாப்பா? கெஞ்சினாரே, என்னை உங்க மகனா நெனைச்சி ஒருமுறை சட்டசபைக்கு அனுப்புங்கன்னு...”

“கமலா!”

“காசு பெரிசாப்பா? ஓட்டு உயிருக்குச் சமம்; பெற்றுவளர்த்த குழந்தைக்குச் சமம் அப்படின்னாரே; அந்த ஓட்டை விக்கலாமாப்பா? என்னை விக்க நீங்க சம்மதிப்பீங்களாப்பா?”

“நீ பேசாம போய்ப் படு!...”

“அவருதான் உங்க கிட்டே எல்லாம் சொன்னாரே, ‘உங்களுக்கு ஓட்டில்லை பாப்பா! ஆனாலும் ஒங்க அப்பா, அம்மா கிட்டச் சொல்லுங்க, சூரியன் பெட்டிக்குத்தான் போடோணுமின்னு’ —அப்படின்னு! அவருக்கா துரோகம் செய்யறது?”

அப்பாவின் கண்களில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

“நமக்கெல்லாம் நல்லது செஞ்சவங்களுக்கு நாசம் செய்யலாமாப்பா?...அக்கிரமமில்லையா? அநியாயமில்லையா அப்பா?”

‘பளார்’ என்று கமலாவின் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது! ‘ஐயோ’ என்று அலறியது அது. அதைத் தொடர்ந்து விம்மி விம்மி அழ ஆரம்பித்தது. பிறகு அந்த அழுகை அன்று இரவு முழுதும் ஓயவேயில்லை. தகாதவழி செல்லும் தந்தையைத் திருப்ப அந்தத் தங்கத் தந்தையின் அழுகை பலன் தந்ததா?

O

இரண்டு நாட்கள் இருண்ட உலகில் இருப்பதாக உணர்ந்த அத்தங்கையின் முகத்தில் மகிழ்ச்சி தோன்றியது மூன்றும் நாள்! ஆயிரக்கணக்கான ஓட்டுகள் வித்தியாசத்தில் உதயசூரியன் பெட்டிக்காரர் வெற்றி பெற்றுவிட்டாராம்! “அப்பா!” என்று வாய்விட்டுக் கூவி குதித்தோடி வந்த கமலாவின் பிஞ்சு நெஞ்சிலே மகிழ்ச்சிப் பெருக்கால் அதற்குமேல் வார்த்தைகளே எழவில்லை!

O

பாராட்டுக் கடிதக் குவியலுக்கிடையே வந்திருந்த அந்தக் கடிதத்தைப் பிரித்தார், வெற்றி பெற்ற எம். எல். ஏ. அதிலிருந்து இரண்டு பத்து ரூபாய் நோட்டுகள் கீழே விழுந்தன. கடிதத்தைப் படித்தார்:

“ஐயா, கறைபட்ட பணம் இது; ஆனால் என் கண்மணியின் கண்ணீர், கறையைத் துடைத்து விட்டது. மீண்டும் எப்போதாவது நீங்கள் ஏழைகளின் கண்ணீர் துடைக்க நிதி சேர்த்தால், எனது முதல் காணிக்கையாக இதை சேர்த்துக் கொள்ளுங்கள்.”

—உதய சூரியனுக்கே ஓட்டளித்தவன்.”

ஓட்டளித்த 48,000 வாக்காளர்களில் யார் எழுதிய கடிதமாக இருக்கும் அது என்று அவர் யோசித்தார்; விடை கிடைக்கவில்லை. ஆனால் ‘மதராஸ் கமலா’ மட்டும் அவரது நெஞ்சத்திலே தனித்து நின்று கொண்டிருந்தது!

—சொர்ணம்.

★ பிறைவானம் ★



✻ 5-ம் பக்கத் தொடர்ச்சி

தப் பெண்ணின் நல்வாழ்வுக்காகவாவது...”

“வறுமையால் வாடுவோரிடமும், விரகதாபத்தால் வேதனைப் படுவோரிடமும் தத்துவம் பேசுவதில் பயனில்லை யாகூத்......என்னைப் பார்...... நீ அடிமை என்பதையும் மறந்து, என்னால் அந்தஸ்து பெற்றவன் என்பதையும் மறந்து, டெல்லி சக்ரவர்த்தினி, முதல் சுல்தானு ருசியா பீகம் என்பதையும் மறந்து, ஒரு பெண் என்ற முறையில் வெட்கத்தையும் விட்டுக் கேட்கிறேன்; பமீயாவைவிட நான் எதில் குறைந்தவள்? அழகிலா? அந்தஸ்திலா? சற்று நேரத்திற்கு முன், என் அழகுச் சோதியில் உன் பமீயா மறைந்துதானே போயிருந்தாள்! இயற்கையாக உணர்ச்சி செல்லும் போக்கிற்கு நீயாகக் கற்பனை செய்து கொண்ட காதல் என்னும் அணையிட்டு ஏன் புது வழியில் திருப்ப முயற்சிக்கிறாய்...பீகத்தின் ஆசையை ஆமோதித்துவிடு! பிறகு பார்! யாகூத் வெறும் ஓம்ராவல்ல; ருசியா பீகத்தின் காதலன்! ருசியாவின் ஆணை கேட்டு அண்ட சராசரங்களும் அடங்கி நடக்கின்றன. ஆனால் அவளும் ஆணை கேட்டு நடக்கும் ஒரு மனிதன் இருக்கிறான் — அவன்தான் யாகூத் என்று உலகம் புகழ்பாடும் ... எண்ணிப் பார், யாகூத்.........”

“எண்ணி முடித்து விட்டேன் பீகம், என் எண்ணத்திற்குரியவள் யார் என்பதை! மாளிகை வாசம் வேண்டாம்; மனதுக்குப் பிடித்த மங்கையை மணக்கும் உரிமை எனக்கிருந்தால் போதும்; ஆடம்பரமும் அதனால் விளையும் ஆபத்துக்களும் எனக்கு வேண்டாம்... பமீயா, என் உள்ளங் கவர்ந்தவளை எனக்கு உரிமையாக விடுங்கள், பீகம்...”

“இரைதேடும் பாம்பிடம் இரக்கம் காட்டச் சொல்லும் தவளையின் கதையாக உன் பேச்சு இருக்கிறது. உன்னை புத்திசாலி என்றுதான் இது வரை எண்ணியிருந்தேன். யாகூத், நீ ஒரு கோழை! முட்டாள்! வாழத் தெரியாதவன்! எண்ணிப்பார்! அடிமையை ஓம்ராவாக்கி டெல்லி சுல்தானு அந்தப்புரத்துக்கு அழைத்துக் கொள்ள வேண்டிய காரணம் என்ன? பணிப்பெண் பமீயாவைப் பரிசளிக்க என்று எண்ணிக் கொண்டிருந்தாய்? பயித்தியக்கார? மேலிடத்துப் பெண்கள் எடுபிடிகளுக்கு சலுகை காட்டினால் என்ன பொருள்? முடிவாகச் சொல்லுகிறேன்—ருசியாவின் ஆதரவும் அவளால் அளிக்கப்படும் அந்தஸ்தும் பெரிதென்று எண்ணுகிறாயா? அல்லது பமீயாவிற்காக உங்கள் இருவருடைய வாழ்க்கையுமே பாழ்படுத்திக் கொள்ளப் போகிறாயா......? பீகத்தை உனக்குத் தெரியுமல்லவா?”

ருசியா, குழையவில்லை; அடிபட்ட பெண் புலிபோல் சீறினாள்.

யாகூத் உள்ளம் குமுறினான். கை இடுப்பிலுள்ள கட்டாரியைத் தொட்டுப் பார்த்தது. கொலைக்காரன், இராஜத் துரோகி என்ற பழிச் சொற்கள் அவனை ஒரு கணம் சிந்திக்க வைத்தன.

“பீகம், அரச வம்சத்திற்கே நீங்கள் ஒரு அவமானச் சின்னம்!”—யாகூத் ஆத்திரத்தைக் கொட்டினான்.

“ஓம்ரா, நீ யார் என்பதை மறந்துவிடாதே......அரசிக்குச் சொந்தமான அபிசீனிய அடிமை...அரசியின் தரிசனத்தைத் தேவ தரிசனமாகக் கருதவேண்டியவன்.....தீர்ப்பா கூறுகிறாய்?”

அரசி பேசி முடிக்கவில்லை. குதிரை வரும் ஓசை கேட்டது.

சற்று நேரத்தில் அரசியைத் தேடிக் கொண்டு, அவளுடைய மெய்க்காப்பு வீரர்கள் வந்து சேர்ந்தார்கள்.

*　　*　　*

அன்று இரவெல்லாம் அரசிக்குத் தூக்கமே வரவில்லை; ஒரு பெண் நாணத்தை விட்டு ஆணிடம் ஆசையை அறிவித்த பின், ஆண் அதை அலட்சியப் படுத்தினால் பெண் அதைப் பெருத்த அவமானமாகத் தானே கருதுவாள்? அதிலும் ருசியா பீகம் கண்டோரின் கருத்தையழிக்கும் கட்டழகி; சர்வாதிகாரியாக வீற்றிருந்து கோலோச்சும் சாகசக்காரி; அந்தப் பாகுமொழியாள் வாய் திறந்து பேசினாலே பரவசமடைந்து குற்றேவல் புரியக் கோமான்கள் காத்திருக்கும் பொழுது, ஒரு அடிமை—அவளால் ஆடம்பர வாழ்க்கைக்கு அறிமுகப்படுத்தப் பட்டவன்—அவளை அவமானச் சின்னம் என்று ஏசுவதா?

நறநற வென்று பற்களைக் கடித்தாள் பீகம்!

மதுக் கோப்பைகள் காலியாகிக் கொண்டேயிருந்தன. ஹூக்கா புகைந்து கொண்டேயிருந்தது.

பமீயா—ஒரு காலத்தில் அவள் அரசியின் நிழலாகவே எல்லோராலும் கருதப் பட்டவள். அந்த நிழலே, இப்பொழுது விஸ்வரூபம் எடுத்து அவளைப் பயமுறுத்துவதா?

பமீயாவிடம் பேசி ஒரு முடிவுக்கு வரும்வரையில் அவள் மனம் ஆறுதல் அடையாது போலிருந்தது. பமீயாவின் அறையை நோக்கிப் புறப்பட்டாள். பமீயாவின் அறைக் கதவைத் தட்டினாள், உள்ளே தாளிடப்பட்டிருக்கும் என்ற எண்ணத்தோடு. ஆனால் தட்டியவுடன் கதவு தானாகவே திறந்து கொண்டது. படுக்கையில் பமீயாவைக் காணோம்.

அரசி சாளரத்தின் வழியாக எட்டிப் பார்த்தாள். தூரத்தில் ஒரு பெண்ணுருவம் குதிரையின் மீதேறி யமுனை ஆற்றங்கரையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

ருசியாவின் புருவங்களின் மேல் சிந்தனை ரேகை படர்ந்தது. யாகூத்தும் பமீயாவும் அவள் வாழ்க்கைக்குச் சவாலாகவே அமைந்து விட்டனர். எத்தனையோ அரசியல் புதிர்களுக்கெல்லாம் எளிதாக விடை கண்டுவிடும் கூர்த்தமதி படைத்த பீகம், தன்னுடைய வாழ்க்கைப் புதிரை அவிழ்க்க முடியாமல் தத்தளித்தாள்.

அரசி பெண்ணுருவம் சென்ற திக்கையே பார்த்துக் கொண்டிருந்தாள். நீல வானில் நட்சத்திரங்கள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன. இரவுப் பெண்ணின் நீலவுடையில் ஒளி விட்டு மின்னிய தாரகைகள் எட்டிப் பிடிக்க முடியாத உயரத்தில் நின்று வேடிக்கை காட்டின.

ருசியா பீகம் பெருமூச்சு விட்டாள். திடமான முடிவொன்றுடன், சாளரத்தின் திரையை மூடினாள்.

*　　*　　*

யமுனை நதியில் நீர் ஓடிக் கொண்டிருந்தது.

“பமீ...!”

அவள் பதில் பேசவில்லை.

“பேசமாட்டாயா, பமீ?”

“நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள் யாகூத்? அதுவும் இந்த பயங்கரமான நேரத்தில்...”

“பமீயா, நீ ஏன் இங்கு வந்தாய்? இட்ட கட்டளையை மீறிய குற்றத்திற்கு நீயும் உடந்தைதானே? காதலை மறக்கச் சொல்லிவிட்ட பிறகும், யாரை நாடி ஆற்றங்கரைக்கு ஓடி வந்தாய்? பள்ளத்தை நோக்கி நீர் பாய்வதும், இரும்பைக் காந்தம் ஈர்ப்பதும் இயற்கையின் செயலல்லவா? புறப்படு பமீ என்னோடு—வெள்ளம் தலைக்குமேல் போய் விட்டது.”

பமீயா, தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தாள்.

“பமீயா, யாருக்காக நீ உன் சுகத்தையும் சுதந்தரத்தையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறாயோ அவள் அந்தத் தியாகத்தைப் பெற சிறிதும் அருகதையற்றவள். செங்கோல் பிடித்தவர்கள் சிற்றின்ப லோலர்களாகும்போது அரியணைக்கு ஆட்டம் ஏற்படுவது தவிர்க்க முடியாதது. அல்தூனியாவும் பெய்ராமும் சதியை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள்; ஆனால் அரசியோ ஆள்பிடிக்க வலை வீசும் திட்டத்தை நிறைவேற்ற நேரத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்......”

“யாகூத், முதலில் சதியை முறியடியுங்கள். பிறகு அரசியைத் திருத்தலாம்......”

“முடியாது பமீ, முடியாது! அடிபட்ட பெண் புலி பழிவாங்க முடிவெடுத்து விட்டது. அதனிடமிருந்து இனி இரக்கத்தை எதிர்பார்த்துப் பயனில்லை.”

“நீங்கள் பேசுவது எனக்கு விளங்கவில்லையே, யாகூத்!”

“விளக்குகிறேன் கேள்; பமீயாவை மறந்து யாகூத் அரசியின் இழி செயலுக்குத் துணை நிற்க வேண்டும்; அல்லது அரசியின் வெறியும் அதிகாரப் போதையும் நம் இருவரையுமே எரித்துச் சாம்பலாக்கிவிடும்”

✻ தொடர்ச்சி 12-ம் பக்கம்



# கடைசிப்பக்கம் எழுத்தாணி

சந்தானராமசாமி ; திருச்சி

## அண்ணாத்துரை "முதலியார்"?

**(?) காங்கிரஸ் ஏடான 'விடுதலை'யில் அடிக்கடி நமது அண்ணாவை அண்ணாத்துரை முதலியார் என்று குறிப்பிடப்படுகிறதே காரணம் என்ன?**

வோட்டர் பதிவுத்தாளில் பதிவு செய்த அதிகாரி தவறாக அவ்விதம் பதிவுசெய்து கொண்டிருப்பார். நாமினேஷன் பத்திரத்தில் அண்ணா அவர்கள் கையெழுத்திடும்போது "முதலியார்" என்ற வாலை ஒட்டிக் கொள்ளவில்லை. ஆனால் **இந்து பகுத்தறிவு வாதி**யின் மாணவர் மட்டும் தனது எழுதுகோலை மனம் போன பக்கமெல்லாம் திருப்புகிறார். சுயமரியாதைக் கட்டிடங்கள் வாங்கப்பட்ட பத்திரங்களில் "நாயக்கர்" என்ற வால் ஒட்டப்பட்ட செய்தி யாருக்கும் தெரியாது என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் போலும்! பாவம்; கூவம் தண்ணீரை பேழையிலே நிரப்பிக்கொண்டிருப்பவர்கள்; பிழைத்துப் போகட்டும்.

(?) சென்ற தடவை கம்யூனிஸ்டுகளையும் இந்தத் தடவை காங்கிரசாரையும் ஆதரித்த திராவிடர் கழகம் அடுத்த தேர்தலில் யாரை ஆதரிப்பார்கள்?

அதுவரை இருந்தால், சோஷலிஸ்டுகளை அதரிப்பார்கள் என்று தெரிகிறது!

வி. எல். ஆறுமுகம்; தூத்துக்குடி.

(?) காமராசரை ஆதரித்தவர்களுக்கு என்ன லாபம்?

பெட்டி நிரம்பியது; கட்சி குறைந்தது.

கா. ராமகிருஷ்ணன், குளித்தலை.

(?) கேரளத்தில் பி. எஸ். பி., முஸ்லிம் லீக் கூட்டுகளையும், வங்காளத்தில் பி. எஸ். பி., கம்யூனிஸ்ட் கூட்டுகளையும் பற்றி பட்டவர்த்தனமாகப் பேசும் காங்கிரஸ் தலைவர்கள் சென்னையிலே தி. க. விற்கும் காங்கிரசிற்கும் ஏற்பட்டுள்ள தேர்தல் உறவைப்பற்றிப் பேசாமல் இருப்பது ஏன்?

காங்கிரஸ்காரர்கள் என்ன செய்வார்கள்; பாவம்! பத்தினி வேஷம் போட்ட அவர்கள் வெட்கமில்லாமல் கையைப் பிடித்து இழுத்தால் காமராசர் என்ன செய்வார்? அவரும் பிரம்மச்சாரிதானே!

அ. மு. அலி; நிரவி.

(?) நாகூர் முஸ்லிம்களில் பலர் பணம் பெற்று காங்கிரசிற்கு ஓட்டளித்தார்கள். நாளை காங்கிரஸ்காரர்கள் பணம் கொடுத்தால் மீலாடி நபி கொண்டாடாமல் வேறொரு பண்டிகை கொண்டாடுவார்களா?

ஆத்திரப்படாதீர் நண்பரே! காசை விடக் கொள்கை பெரிது என்ற நம்பிக்கை உருவாகும் காலம் வெகு தூரத்தில் இல்லை!

(?) திருமதி ஜோதி வெங்கடாசலம் யார்?

'ஒரு நாள் ராஜா' — என்பதைப் போல அவர் ஒரு 'ஒரு நாள் எம். எல். ஏ.'!

மா. செங்குட்டுவன்; அவிசாவேள்ள.

## அண்ணாவின் சந்திப்பு!

**(?) பெரியார் ஆச்சாரியாரைச் சந்தித்ததற்கும், அண்ணா ஆச்சாரியாரை சந்தித்ததற்கும் என்ன வித்தியாசம்?**

பெரியார் ஆச்சாரியாரைச் சந்தித்தார்—அவர் ஆலோசனையின்படி திருமணம் செய்து கொண்டார்!

அறிஞர் அண்ணா ஆச்சாரியாரைச் சந்தித்தார்—திராவிடம் என்றால் 'தீராவிடம்' என்று நினைத்துக் கொண்டிருந்த ஆச்சாரியார் "திராவிடத்தைக் காப்போம்"—என்று 'கல்கி' ஏட்டில் தலையங்கம் தீட்டுகிற அளவுக்குத் தெளிவு பெற்றார்!

—இதுதான் தோழரே வித்யாசம்!

✻ 8-ம் பக்கத் தொடர்ச்சி

வெற்றிபெற இயலாது போய் விட்டது!

அதுபோலவேதான் சில இடங்களில் காங்கிரஸ் பெற்ற ஓட்டுகள் புனிதமானவையல்ல; அவை பல கட்சி ஓட்டுகள்; பணம் கொடுத்து பெற்ற ஓட்டுகள்! எப்போதும் அதுபோலவே ஓட்டுகள் பெற்று வெற்றி பெற காங்கிரசால் இயலாது என்பதற்கான எடுத்துக்காட்டுகள்தான் குளித்தலையும், காஞ்சிபுரமும்!

12-ம் தேதியன்று கரூரிலுள்ள திருமாநிலையூர் என்ற இடத்திற்கு நான் சென்றிருந்தேன். அப்போது ஒரு ஏழை வாக்காளர் என்னிடம் வந்தார். தன் கையிலிருந்த புள்ளியைக் காண்பித்தார். "எனக்கு ஒரு ரூபாய் தந்தார்கள் ஓட்டுக்காக! நான் பணத்தைப் பெற்றுக் கொண்டேன்; ஆனால் என் ஓட்டை உதயசூரியன் பெட்டியில்தான் போட்டேன்!" என்று மகிழ்ச்சியோடு சொன்னார். குளித்தலைத் தொகுதியில் பல இடங்களில் அது போல நடந்திருக்கிறது. பணத்தையும் வாங்கிக் கொண்டு உதய சூரியனுக்கே ஓட்டுப் போட்டிருக்கிறார்கள்; அத்துடன் பணத்தையும் போட்டிருக்கிறார்கள்! சில பெட்டிகளில் அரை ரூபாய், கால்ரூபாய் என்று நாணயங்கள் கிடந்தன. ஆனால் அவை எல்லாம் அபேட்சகர்களுக்குச் சொந்தமல்ல; அரசாங்கத்துக்கேதான் சொந்தம் என்று எடுத்துக் கொண்டுவிட்டனர். அப்படி அங்கே போடமுடியாத சிலர், இந்தத் தேர்தல் வெற்றி விழா கூட்டத்திலே எனக்கு அன்பளிப்பு என்று ஒரு ரூபாய்களாகத் தந்திருக்கிறார்கள். எனக்கு ஓட்டும் தந்தார்கள்; ஒரு ரூபாய் நோட்டும் தருகிறார்கள்!

இப்படியாக வாக்கு மீறாத தோழர்கள் தந்த வாக்குகள் தான் எனக்கு வெற்றியைத் தந்திருக்கிறது; அதுபோல் நானும் வாக்கு பெறுவதற்கு முன் தங்களிடம் தந்த வாக்குறுதிகளை மறவாது உங்களுக்கு என்றும் குன்றா தொண்டு புரிவேன் என்று கூறிக் கொள்கிறேன்!

வணக்கம்!

✻ 11-ம் பக்கத் தொடர்ச்சி

"நாடு...?"

"அது நாசமாகட்டுமே! உங்கள் பீடத்திற்கு அதைப் பற்றி என்ன கவலை?"

"யாகூத்...!" — கோரமாகக் கத்தினாள் பமீயா. அவள் கண்களில் கோபக்கனல் வீசின. "நீங்கள்தானா பேசுகிறீர்கள்?"

"நானேதான் பேசுகிறேன். அதுமட்டுமல்ல; நாட்டின் விடுதலைப் போரில் பமீயாவும் பங்கு பெற வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்."

"விடுதலைப் போர்! வேடிக்கையான போர் யாகூத்! பமீயா உயிருள்ள வரையில் அரசிக்குத் துரோகம் புரிய மாட்டாள்......யாகூத், நீங்கள் சதிகாரருக்குத் துணை போகக் கூடாது!"

"முடியாது பமீ!"

"துரோகி!" — பமீயாவின் கரங்கள் மளமள வென்று யாகூத்தின் கன்னங்களில் அறைந்தன. அவள் ஆத்திரம் தீருமட்டும் அறைந்தாள். அவனோ ஆத்திரமே அடையவில்லை; கண்களை மூடிக் கொண்டபடியே அந்த மிருதுவான கரங்கள் அளித்த தண்டனையை ஏற்றுக்கொண்டான்.

அவன் கண் விழித்துப் பார்த்தபொழுது, பமீயாவின் குதிரை அவளைச் சுமந்து சென்று கொண்டிருந்தது.

(தொடரும்)


அறிக்கை

"முரசொலி"

| | | |
|---|---|---|
| 1. | வெளியாகும் இடம் : | 4-128, மவுண்ட் ரோடு, சென்னை—6. |
| 2. | வெளியிடும் நாட்கள் : | வாரம் ஒருமுறை |
| 3. | அச்சிடுவோரின் பெயர் : | மு. கருணாநிதி. |
| | இனம் : | திராவிடர் |
| | முகவரி : | 4-128, மவுண்ட் ரோடு, சென்னை—6. |
| 4. | வெளியிடுவோரின் பெயர் : | மு. கருணாநிதி |
| | இனம் : | திராவிடர் |
| | முகவரி : | 4-128, மவுண்ட் ரோடு, சென்னை—6. |
| 5. | ஆசிரியரின் பெயர் : | மு. கருணாநிதி |
| | இனம் : | திராவிடர் |
| | முகவரி : | 4-128, மவுண்ட் ரோடு, சென்னை—6. |
| 6. | பத்திரிகையின் உரிமையாளர்களுடைய பெயர்களும் முகவரியும் அல்லது பத்திரிகையில் ஒரு சத விகிதத்திற்கு அதிகமான மூலதனம் போட்டுள்ளவர்களின் பெயர்களும் முகவரியும். | மு. கருணாநிதி, 4-128, மவுண்ட் ரோடு, சென்னை—6. |

என் அறிவிற்கும், நம்பிக்கைக்கும் நன்கு தெரிந்த மட்டில், மேலே கொடுக்கப்பட்டுள்ள விபரங்கள் யாவும் உண்மையானவை என்று மு. கருணாநிதியாகிய நான் அறிவிக்கிறேன்.

1—3—57 (ஒப்பம்) மு. கருணாநிதி
வெளியிடுவோர்


ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி, 'முரசொலி' அச்சகம், 4–128, மவுண்ட்ரோடு, சென்னை-6. தமிழ்நாடு.

